REGD. No. M 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
*116-119*, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

இப்போது! சாப்பிட்டவுடன்

# கோல்கேட் டென்டல் க்ரீமால் பல் துலக்குவதானது பல் சிதைவைத் தவிர்க்க உதவுகிறது

பிரபல பல் வைத்தியர்களின் மேற்பார்வையில் ஒரு தொகுதி காலேஜ் மாணவர்கள் சாப்பாட்டிற்குப் பின் 'கோல்கேட்' உபயோகித்துப் பல் துலக்கினர்— மற்றொரு தொகுதியினர் வழக்கப்படி பல் துலக்கினர். 'கோல்கேட்' உபயோகித்தோருக்குப் பற்களில் ஓட்டை விழுவது வேகமாகக் குறைந்தது. மற்றவர்களுக்கோ புதிய புதிய ஓட்டைகள் அதிகரித்தது. 'கோல்கேட்' எல்லாவித பல் சிதைவையும் தடுக்கும் என்று நாம் கூறவில்லை. ஆனால் 'கோல்கேட்' உபயோகித்தால் பல் சிதைவை நிறுத்த உதவுகிறது என்பது நிரூபிக்கப் பட்டிருக்கிறது.




எப்போதும் கோல்கேட் *உபயோகியுங்கள்
அதன்மூலம் உங்கள் பற்களை துலக்குவதோடு
கூடவே வாயை துர்க்கந்தம் அகற்றி
பல் சிதைவைத்தடுங்கள்!

*சாப்பிட்டவுடன்

கோல்கேட் நைலான் டூத்
பிரஷ் வாங்குங்கள்




நைலான் குஞ்சங்கள்
உங்கள் எனாமலை பாதுகாப்பது
போல் அமையப்பெற்றுள்ளன.

இதுவே பத்திரமும் உறுதியுமான வழி என்பது ருசுவாகிவிட்டது.

---

## வளரும் குழந்தைகளுக்கு அவசியமானது

# விடோபெரின்

குழந்தைகளுக்கு விடோபெரின் கொடுத்து அவர்கள் வளர்ச்சியடைவதைக் கவனியுங்கள். வளரும் குழந்தைகளுக்கும், நோய் நீங்கி குணம்பெறுவோருக்கும் தேக வளர்ச்சிக்கு அவசியமான பொருள்களெல்லாம் விடோபெரினில் இருக்கின்றன.



தயாரிப்பவர்கள்
மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரீஸ் லிட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்.

விற்பனை ஏஜண்டுகள்:
பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்.
தபால்பெட்டி நெ. 63, மதராஸ்.

BL25TM

# போனேமிண்ட்

## பேதியாகும் சூயிங்கம்




திவ்வியமான பப்ர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

**போனேமிண்ட் பேதியாகும் சூயிங்கம்**

ஏஜண்டுகள்: தி ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜன்சி
99-ஏ, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்—1

---

## பார்லி வாட்டரும், கஞ்சியும்
## இவ்விதம் சுலபமாகத் தயாரிக்கலாம்




*பார்லி வாட்டர்:* பியூரிடி பார்லி இரண்டு டீஸ்பூன் மட்டத்திற்கு எடுத்துக்கொண்டு சிறிது ஜலம் சேர்த்துக் கலந்து ஒரு பைண்ட் ஜலம் விட்டு ஐந்து நிமிஷம் கொதிக்கவிடவும். பிறகு ருசிக்குத் தக்கபடி உப்பு சர்க்கரை அல்லது எலுமிச்சம்பழ ரஸம் சேர்க்கவும்.

கஞ்சி: இதை வழக்கம்போலத் தயாரிக்கவும். ஆனால் தயாரிக்க இருபது நிமிஷ நேரம் தான் ஆகும். ஒரு ஸ்பூன் பியூரிடி பார்லி எட்டு ஸ்பூன் சாதாரண பார்லி அரிசிக்குச் சமம் என்பது ஞாபகமிருக்கட்டும்.



# பியூரிடி பார்லி

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட், தபால் பெட்டி 664, கல்கத்தா.

APBX-7 TAM

சங்கர் ICL பிராண்ட்

# சூலம் மார்க்
## போர்ட்லண்ட் ஸிமெண்ட்

# 20

மூட்டைகள் வரை

## பர்மிட் இல்லாமல்

கீழ் கொடுக்கப்பட்டுள்ள மதுரை ஜில்லா ஸ்டாக்கிஸ்டுகளிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்

**என். பி. நீலகண்ட அய்யர்**
*16, தெற்கு ரத வீதி, திண்டுக்கல்*

**எஸ் சென்னியப்ப முதலியார்**
*170, கீழ வெளி வீதி, மதுரை*

**வி. மாணிக்கம்**
**C/o என். வி. எம். மோட்டார் ஸர்வீஸ்**
*மேல வாசல், மதுரை*

**மெஜிந்தியா டைல்ஸ் & என்ஜினியரிங் கம்பெனி**
*79, மேல ஆவணிமூல வீதி, மதுரை*

**M. S. O. SP. V. வேலாயுதம் செட்டியார்,** *பழனி*

**ஏ. & எப். ஹாரிஸ் லிமிடெட்**
**P. B. No. 35,** *மதுரை*
*(திண்டுக்கல் தாலுக்காவிற்கும்)*

**M. S. O. SP. V. வேலாயுதம் செட்டியார்**
*57, வெள்ளியம்பல வீதி, மதுரை*

**வி. ஏ. புன்னையப்ப நாடார் & கோ.**
*247, கீழ மாசி வீதி, மதுரை*

**கே. ஏ. எஸ். தர்மராஜ நாடார்**
*இரும்பு வியாபாரம்*
*தேனி, பெரியகுளம் தாலுக்கா*

**எஸ். வி. கருப்பண்ணக் கோனார்**
*48, மேலரத வீதி, சோழவந்தான்*
*நிலக்கோட்டை தாலுக்கா*

**ஏ. கே. மலையப்பபிள்ளை நாடார் & ஸன்ஸ்**
*7/301, வாணியர் வீதி, திருமங்கலம்*

*தமிழ்நாட்டின் மற்றும் எல்லா ஜில்லாக்களின் முக்கிய நகரங்களிலும் இந்தியா ஸிமெண்ட்ஸ் ஸ்டாகிஸ்டுகளுள்ளனர்*

# இந்தியா ஸிமெண்ட்ஸ் லிட்

*தொழிற்சாலை:* தாழையூத்து, திருநெல்வேலி ஜில்லா.
*ரிஜிஸ்டர் ஆபீஸ்* 11/12, டேக்கண்ட் லேன் பீச், மதராஸ்-1



நளினி கிப்ஸ் உபயோகிக்கிறாள்—அவள் பற்கள் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன.
நளினி கிப்ஸ் டென்டிபிரிஸை விரும்புகிறாள். அவள் சிறுவயதிலிருந்தே அதை உபயோகித்து வருகிறாள்.
காலையிலும் மாலையிலும் எல்லா பற்களையும் கிப்ஸினால் தேய்க்கிறாள். மேலும் கீழுமாக, ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கமாக அல்ல.
அவள் பற்கள் பிரகாசமாகவும் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அது கிப்ஸ் டென்டிபிரிஸினால் தான்!
நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா ?
சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் நாசம் விளைவிக்கக்கூடும். நுரை போல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புது மணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.
Gibbs
DENTIFRICE
கிப்ஸ்
டென்டிபிரிஸ்
ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது
விலையோ சொற்பம்—பலநாட்கள் நீடித்துவரும்
GD. 80-172 TM

தீர்த்த யாத்திரைக்குப் போகும் வழியில் ஒரு நாள் தன் அக்காவின் வீட்டில் தங்கி விட்டுப் போகப் போகிறாள் என்ற காரணம் தான். எனது மாமியின் அதிக வசவுகளைக் கண்டதும் பார்வதி மாமி இங்கு ஏன் வருகிறாள் என்று தோன்றியது. அவள் இங்கு வந்தால் அவள் முகத்திலேயே விழிக்கக் கூடாது என்று நான் திட்டமிட்டேன்.

அன்று காலை பதினொரு மணி இருக்கும். பார்வதி மூட்டை முடிச்சுகளுடன் வந்து சேர்ந்தாள். என் மாமிக்கு அவள் வந்ததில் பெருமை தாங்கவில்லை. ஆனால் எனக்கோ அவளைப் பார்க்கவே மனம் கூசியது.

மத்தியானம் இரண்டு மணி இருக்கும். மாமி நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள். கூடத்தில் என் மாமாவும், பார்வதி மாமியும் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசிக் கொண்டது எல்லாம் கூடத்து அறையில் உட்கார்ந்திருந்த என் காதில் தெளிவாக விழுந்தது:

"அத்திம்பேரே! ஜெயம் காலையிலிருந்து என் கண்ணிலேயே படவில்லையே! அவள் கோபம் இன்னும் தீரவில்லை போலும்!" என்றாள் பார்வதி மாமி.

"அவளுக்கு உன்னிடம் என்ன கோபம்?" என்று வினவினார் மாமா.

"அது பெரிய கதை" என்று கூறி அதைச் சொல்லத் தொடங்கினாள்:

'ஜெயத்துக்கு அம்பியின் மீது ஆசை விழுந்திடுச்சு' என்று சுவர்ணம் ஒரு நாள் சொன்னாள். முதலில் நான் அதை நம்பவில்லை. அதன் பிறகு அவளிடமிருந்தே தெரிந்து கொள்ள விரும்பினேன்.

"ஜெயத்துக்கு நான் அம்பியைப் பற்றிச் சொன்னபொழுதெல்லாம் அவள் ஆசையோடு கேட்பாள். அவன் பெயரைச் சொன்னாலே அவள் முகம் மலர்ச்சியடையும். அம்பியை அவள் விரும்புவது எனக்குப் பிடிக்கவில்லை. அவன்தான் முரடன் ஆயிற்றே, அவனுக்கு இவளைக் கொடுப்பதா என்ற காரணத்தினால்தான். அது தவிர ஏழைப் பெண் நாமொருத்தி அந்தக் குடும்பத்தில் புகுந்து பட்ட கஷ்டமெல்லாம் போதாதா? இந்தப் பேதைப் பெண்ணையும் அந்தக் குடும்பத்தில் தள்ள நான் ஆசைப்படவில்லை. அதனால்தான் அவளை அவன் வருவதற்கு முன்பே இங்கு அனுப்பி விட்டேன். இதில் அவளுக்கு என் மீது மனத்தாங்கல். அவளுக்கு நல்லது செய்ய வேண்டும் என்கிற என் எண்ணத்தில் அந்தக் கோபத்தை நான் இலட்சியம் செய்யவில்லை. மேலும் ஜெயத்தை முன்பே அனுப்பி வைத்தது நல்லதாய்ப் போயிற்று. அம்பி வந்ததும் அவனுக்கு முன்பே கல்யாணமாகிவிட்டது என்று தெரிந்தது. இந்தச் செய்தியை அந்தப் பெண் அங்கிருந்தால் எப்படி தாங்கிக் கொள்ளும்? அவ்வளவுதான்; ஒரேயடியாக அவள் மனசு முறிந்து உட்கார்ந்துவிடுவாள். பகவான் அருளாலே அவளை இங்கு அனுப்பி வைத்தது நல்லதாகப் போய் விட்டது" என்று சொல்லிக்கொண்டே போனாள் பார்வதி மாமி.

இதைக் கேட்டதும் எனக்குப் பார்வதி மீதிருந்த துவேஷம், வெறுப்பு எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது. அவள் பின்னால் சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் அப்படியே என் மனம் ஸ்தம்பித்து விட்டது. அவள் கூறியது இதுதான்:

"அத்திம்பேரே! ஜெயத்தின் கல்யாணத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். இங்கு நான் வந்ததற்கு முக்கிய காரணமே அதுதான். இல்லாவிட்டால் அப்படியே தீர்த்த யாத்திரைக்குக் கிளம்பிப் போயிருப்பேன். இந்தாருங்கள், ஐயாயிரம் ரூபாய்! என் நகைகளையும் அவளுக்கே கொடுக்க நிச்சயித்து விட்டேன். இதை வைத்துக் கொண்டு நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வையுங்கள். இந்தப் பணம் கொடுத்த செய்தி என் அக்காவுக்குத் தெரிய வேண்டாம். அவள் வேண்டாத புரளியெல்லாம் செய்வாள். ஜெயம் நல்ல இடத்தில் வாழ்க்கைப் பட்டுச் சந்தோஷமாயிருக்க வேண்டுமென்பது தான் என் ஆசை. நான் தீர்த்த யாத்திரையெல்லாம் போய்ப் பிழைத்துக் கிடந்தால் அவள் கணவனோடு சந்தோஷமாயிருப்பதை ஒரு தடவை வந்து பார்க்கிறேன்" என்று கூறி முடித்தாள் பார்வதி மாமி.

இதைக் கேட்ட பிறகு பார்வதி மாமியைப் பற்றி நான் கொண்டிருந்த தப்பபிப்பிராயமெல்லாம் மறைந்தது. அவள் எனக்கு அப்போது கண்கண்ட தெய்வமாக விளங்கினாள். உடனே நன்றிக் கடன் உந்தித் தள்ள ஓடிப் போய்ப் பார்வதி மாமியின் காலில் விழுந்து, "மாமி, என்னை மன்னித்து விடுங்கள்!" என்று கூறினேன்.

பார்வதி மாமி என்னைக் கீழே யிருந்து தூக்கி, "சீக்கிரம் கல்யாணம் பண்ணிண்டு தீர்க்க சுமங்கலியா யிரு" என்று ஆசீர்வதித்தாள். என் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

எனக்கு ஒவ்வொரு நாளும் ஆமையைப் போல் ஊர்ந்து செல்வது போல் தோன்றியது. என் மனம் ஒவ்வொரு நிமிஷமும் அந்த நாளை வெகு ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தது.

அம்பி வருவதற்கு முதல் நாள். பார்வதி மாமி என்னைக் கூப்பிட்டு, “ஜெயம்! நீ இன்றைக்குச் சாயந்திர ரயிலில் உன் மாமாவின் வீட்டுக்குப் போக வேண்டும். உனக்குத் துணையாக சுவர்ணத்தை அனுப்புகிறேன்” என்றாள். அவ்வளவுதான்; என் தலை ‘கிர்’ என்று சுற்றியது. ‘மாமி! அம்பியை ஒரு தடவையாவது நான் கண் குளிரப் பார்த்து விட்டுப் போய் விடுகிறேன்’ என்று சொல்ல வேண்டும் என்று தோன்றியது. ஆனால் பாழும் வார்த்தைகள் வாயிலிருந்து வெளி வர மறுத்துவிட்டன. அப்படிச் சொல்லியிருந்தாலும் சம்மதித்திருக்க மாட்டாள் என்பது பார்வதி மாமியின் முகத்திலிருந்து நன்றாகத் தெரிந்தது.

அன்றிரவே வேண்டா வெறுப்போடு நான் திருநெல்வேலியிலிருந்து சுவர்ணத்துடன் என் மாமாவின் வீட்டுக்கு ரயில் ஏறினேன். ரயிலில் சுவர்ணத்தினிடம் என் குறையையெல்லாம் கூறி அழுது தீர்த்தேன்.

“அழாதே, பாப்பா! அந்த அம்மாவே அப்படித்தான்! நீ எங்கே அம்பியைக் கட்டிக்கிட்டு அவ்வளவு சொத்தையும் கொள்ளை கொண்டு போய்விடுவாயோ என்கிற பயம். அதனால்தான் உன்னை முன் ஜாக்கிரதையா வீட்டிலிருந்து அனுப்பிட்டாங்க!” என்றாள் சுவர்ணம்.

“என்ன இருந்தாலும் அவள் என் மாமியின் தங்கைதானே? அந்தக் குணம் எப்படி மாறும்?” என்று வேதனையுடன் பதிலளித்தேன். எனக்கு மாமியின் கொடுங்கோல் ஆட்சியை நினைத்ததும் பகீரென்றது. அன்றிரவு பூராவும் ரயிலில் தூக்கமே வரவில்லை. என் தலைவிதியை எண்ணி நொந்து கொண்டேன். வேறு என்ன செய்ய முடியும்?

மறுநாள் காலையில் என் மாமாவின் வீட்டை யடைந்தேன். சுவர்ணம் என்னைச் சேர்த்து விட்டு அன்றே ஊருக்குத் திரும்பிப் போய் விட்டாள்.

## 4

நாட்கள் வெகு வேகமாக ஓடிக் கொண்டிருந்தன. தினம் பொழுது விடிந்தால் மாமியிடம் வசவு வாங்குவது வழக்கமாகி விட்டது. அன்று என்னை மாமி மிகவும் அதட்டி வேலை வாங்கினாள். அதற்குக் காரணம் அவள் தங்கை பார்வதி



# நல்ல கேள்வி?



ஆரம்பிச்சிடுச்சு. சின்னம்மா சொல்றபடியெல்லாம் ஐயா ஆடத்தொடங்கிட்டாங்க—என்ன ஜெயம்மா! இதை யெல்லாம் அம்மா கிட்டே போய்ச் சொல்லிக்கிட்டிருக்காதே! சொல்லிக்கிட மாட்டாயே?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் சுவர்ணம்.

"இதையெல்லாம் போய்ச் சொல்லுவாங்களா? மேலே சொல்லு!" என்று கதையின் மேலுள்ள ஆவலால் கூறினேன்.

அவள் மேலும் தொடர்ந்து சொன்னாள் :—

"இப்படி ஐந்தாறு வருஷங்கள் கழிஞ்சுதுங்க. அவருக்குப் பணம் கட்டற பரீட்சையெல்லாம் முடிஞ்சு லீவு விட்டுட்டாங்க. அப்பத்தான் அந்தச் சம்பவம் நடந்துதுங்க.

"ஒரு நாள் இரண்டு மணியிருக்கும். அம்பி ஐயா எங்கெல்லாமோ சுத்தித் திரிஞ்சுவிட்டுப் பசியோடு வந்திருந்தாரு போலிருக்கு. நம்ம சின்னம்மா இருக்காங்களே அவங்க, "ஏன் அம்பி! தெருவெல்லாம் சுத்தித் திரிஞ்சுவிட்டு இரண்டு மணிக்கு வறயே, லீவு நாளில் அப்படி என்ன வெட்டி முறிக்கிறாய்? சீக்கிரம் சாப்பிட்டுவிட்டுப் போகக்கூடாதா?' என்று கடிஞ்சிட்டாங்க. சின்ன ஐயா ஏற்கெனவே முன் கோபக்காரரு. அவருக்கு அந்த வார்த்தைகளைக் கேட்டதும் கோபம் பொத்துக்கிட்டு வந்திடுச்சு.

"'ஒரு வேளை கஞ்சிக்கு லாட்டரி அடிச்சுக்கிட்டு இருந்தவளுக்கு நாலு நாம் சாப்பாடு கிடைச்சால் இதுவும் பேசுவே, இன்னமும் பேசுவே!' என்று ஆத்திரத்திலே கூறிட்டாங்க. அவ்வளவுதான்; சின்னம்மாவுக்கு ரோசம் தாங்கலே. அப்படியே ஒரு மூலையிலே போய் உட்கார்ந்து 'ஹோ' வென்று அழ ஆரம்பிச்சுட்டாங்க. இந்தச் சமயத்திலேதானு பெரிய ஐயா வரணும்? சின்னம்மா அழறதைப் பார்த்ததும் அம்பி ஐயாதான் சின்னம்மாவை அடிச்சுட்டாராக்கும் என்று நினைச்சு அம்பியை அவரு ஓங்கிக் கன்னத்திலே ஒரு அறை அடிச்சிட்டாரு. இன்னொரு அறை அடிக்கறதுக்குள்ளே நான் போய்த் தடுத்துக்கிட்டேன். அம்பி ஐயாவுக்கு என்ன தோணுச்சோ என்னமோ, அன்னைக்கு வீட்டை விட்டு ஓடினவர்தான்; அப்புறம் காணலீங்க!" என்று கூறியதும் அவள் கண்களிலிருந்து நீர் அருவியாகப் பொழிந்தது. ஆனால் அவள் கதை சொல்வதை நிறுத்தவில்லை. கண்களைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டே கூறலானாள் :-

"சின்ன ஐயா ஓடிப் போய் ஆறு மாசத்துக்கு மேலே ஆயிடுச்சுங்க. பெரிய ஐயாவுக்கு அம்பி ஐயாவைப் பிரிஞ்ச துக்கம் வியாதியாக மாறிவிட்டது. அந்தக் கவலையே வியாதியைக் கொண்டு வந்து இந்த உலகத்திலிருந்தும் பிரிச்சுக்கிட்டுப் போய்விட்டது. இனிமேல் இந்தக் கண்ணுக்குச் சின்ன ஐயாவைப் பார்க்கக் கொடுத்து வைச்சிருக்கோ, என்னமோ?" என்று கூறி முடித்தாள் சுவர்ணம்.

'பார்வதி மாமி இவ்வளவு கொடூரமானவளா? என்னிடம் அன்பாக நடந்து கொள்கிறாளே? பாசாங்காக இருக்குமோ?' என்று பல சந்தேகங்கள் எழுந்தன. 'என்ன இருந்தாலும் அவள் என் மாமியின் தங்கை தானே? அவள் குணம்தானே அவளுக்கும் இருக்கும்' என்று என் உள் மனது பதிலளித்தது. "வரேன் சுவர்ணம்! மாமிக்கு மருந்து கொடுக்கணும்" என்று அவளிடமிருந்து விடை பெற்றுச் சென்றேன்.

3

அன்று எங்கள் வீடே அல்லோலகல்லோலப்பட்டது. வீட்டை விட்டு ஓடிப் போன அம்பி இன்னும் ஒரு வாரத்தில் வரப் போகிறார் என்று கடிதம் வந்ததினால்தான். அம்பிக்குப் பிடித்தமான பக்ஷணங்களையெல்லாம் சமையற்கார மாமியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள் பார்வதி மாமி. கூடத்து அறையை அழகுபடுத்துவதில் நான் மும்முரமாக ஈடுபட்டிருந்தேன். கைகள்தான் ஏதோ இயந்திரம் போல் வேலை செய்தனவே தவிர என் மனம் பூராவும் அவரைப் பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தது. 'அவரைக் கல்யாணம் செய்து கொண்டால் என்னைவிடப் பாக்கியசாலி யார்?' என்று எண்ணமிட்டது என் மனம்.

நிடையே உள்ள மலர்கள் எல்லாம் கண்டவர் மனத்தைக் கவர்ந்தன.

தாழ்வாரத்துக்குப் பக்கத்திலிருந்த அறையில் தற்செயலாக நுழைந்தேன். அவ்வறையை வெகு நாட்களாக உபயோகப்படுத்தாததால் தூசியும் துப்பட்டையும் அடர்ந்திருந்தன. அங்கே மாட்டியிருந்த ஒரு போட்டோ என்னைக் காந்தம் போல் கவர்ந்தது. அழகே உருவான ஒரு இளம் வாலிபனின் படம் என்னைப் போன்ற பருவ மங்கைகளின் மனதைக் கவர்ந்திழுத்ததில் ஆச்சரியமில்லையல்லவா? கண்ணைக் கூடக் கொட்டாமல் அவ்விளைஞனின் வனப்பில் அப்படியே மதி மயங்கியிருந்தேன். நேரம் போனது கூடத் தெரியவில்லை. வேலைக்காரி சுவர்ணம் கூப்பிட்டதும்தான் திடுக்கிட்டுத் திரும்பினேன்.

“என்ன பாப்பா! அப்படியே வைச்ச கண் வாங்காமல் அதையே பார்த்துக்கிட்டிருக்கயே! அம்பி ஐயாவைப் படத்திலே பார்த்தே இப்படிப் பிரமிச்ச நின்னு நேரிலே பார்த்தா அவ்வளவுதான்!” என்று எளனத்துடன் கூறிவிட்டுக் ‘கலகல’வென்று சிரித்தாள் சுவர்ணம்.

“ஆமாம், உனக்கு எப்பொழுதும் கேலிதான்!” என்று கூறிவிட்டு அவள் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். அவள் ஓடி விடுவாளோ என்ற காரணத்தினால் தான். பிறகு அவரைப் பற்றிக் கேட்க முடியாமல் போய் விடுமல்லவா?

“சுவர்ணம், அவர் யாரென்று சொல்ல மாட்டாயா?” என்றேன் ஆவலுடன்.

“உனக்குச் சொல்லணும்னு பூராக் கதையில்லே சொல்லணும்? இப்போ முடியுமா?” என்றாள் சுவர்ணம்.

“பரவாயில்லை சொல்லு, கேட்கிறேன்” என்று அவள் கையைப் பிடித்துக் கீழே உட்கார வைத்தேன்.

சுவர்ணம் முதலில் கொஞ்சம் பிகு பண்ணிக் கொண்டு பிறகு சொல்ல ஆரம்பித்தாள் :—

“இந்த ஊரிலே நம்ம வீட்டு ஐயாதான் பெரிய பணக்காரரு. ஐயாவுக்கு ஒரே பிள்ளை. அவரு எம்புட்டு அழகு தெரியுமா? சின்ன ஐயா பேரு சுந்தரம். நாங்க அவரை ‘அம்பி’ன்னுதான் கூப்பிடுவோம். அம்பி ஐயாவுக்கு எட்டு வயசாயிருக்கச்சே வீட்டு அம்மா காய்ச்சலாக் கிடந்து போயிட்டாங்க. அன்னிக்கு அம்பி ஐயா அழுததை நினைச்சா இப்பக்கூட எனக்குக் கண்ணிலே தண்ணி வந்துடும்.

“அம்மா போய் இரண்டு வருசம் கழிஞ்சதுங்க. தாயில்லாப் பிள்ளையை வளர்க்கிறதுக்காகப் பெரிய ஐயா ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தியைக் கல்யாணம் கட்டிக்கிட்டாரு. அந்தப் பெண்ணுதான் இப்போ படுக்கையிலே இருக்காங்களே, அவங்க. இந்த அம்மா என்ன சொக்குப்பொடி போட்டாங்களோ தெரியவில்லை. அப்புறம் ஐயாவுக்கு அம்பி ஐயா மேலேயுள்ள ஆசை வரவரக் குறைய



# கண் கண்ட தெய்வம்

பி.எஸ். மணி



பத்தாவது வயதில் தாய் தந்தையரை இழந்த நான், என் மாமாவின் வீட்டில் தஞ்சம் புகுந்தேன். என்னை எவ்வளவோ அன்புடனும், ஆதரவுடனும் வளர்க்கத்தான் நினைத்தார் அவர். ஆனால் அல்லி ராஜ்யம் நடக்கும் என் மாமா வீட்டில் ஆதரவை எதிர்பார்க்கலாமா? எனது மாமியின் கோபத்துக்கு மாமாவே ஆளாகிப் பயந்து நடுங்கினார் என்றால், என்னை அவள் லேசில் விட்டு விடுவாளா? அவளது கண்காணிப்பில் வேளா வேளைக்குச் சோறு கிடைப்பதற்குப் பதிலாக வேண்டிய மட்டும் வசவு கிடைத்தது. அவள் கையில் தூண்டிலில் அகப்பட்ட புழுவைப் போல நான் துடித்துக் கொண்டிருந்தேன்.

*　　*　　*

ஒரு நாள் சமையலறையில் தேய்த்த பாத்திரங்களை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தேன். கூடத்தில் என் மாமாவும் மாமியும் பேசிக்கொண்டிருப்பது என் காதில் விழுந்தது.

“என்னா! பார்வதியிட மிருந்து கடிதம் வந்திருக்கு. ஒத்தாசைக்கு ஒரு பெண் வேணுமென்று அவள் எழுதியிருக்கா!”

“அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?”

“அதுதான் நம் வீட்டில் ஒரு பீடை இருக்கிறதே, அதை அனுப்பினால் என்ன? இங்கே கொட்டிக்கிறதுக்கு அங்கே போய் கொட்டிக்கட்டுமே!” என்றாள் மாமி. அவளது வார்த்தைகளில் ஆத்திரமும், பொறுமையும் தொனித்தது.

“சரி, பார்க்கலாம்!” என்றார் மாமா.

இந்த வார்த்தைகள் என் காதில் விழுந்ததும் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. உண்டாகாதா, என்ன?

இந்தச் சம்பாஷணை நடந்து ஒரு வாரம் கூட ஆகவில்லை. ஒரு வழித் துணையுடன் என்னை என் மாமியின் தங்கை பார்வதியின் ஊரான திருநெல்வேலிக்கு ரயிலேற்றி அனுப்பினார்கள். ஆனால் மற்றொரு கவலை என் மனத்தில் தோன்றி எனக்குச் சொல்ல வொண்ணாத் துயரை யளித்தது.

‘எனக்கு மாமி வீட்டிலிருந்து வந்ததில் மட்டற்ற மகிழ்ச்சிதான். இப்பொழுது போகப் போகிற இடத்திலுள்ளவள் என் மாமியின் தங்கைதானே? அவளும் என் மாமியின் குணத்தை உடையவளாக இருந்தால்?’ என்ற எண்ணம் தோன்றியதும் என் மனம் படாத பாடு பட்டது. போகிற இடத்திலும் துரதிர்ஷ்டம் தொடர்ந்து கஷ்டப்பட வேண்டி நேருமோ என்ற திகில் உண்டாயிற்று.

எதிர்பார்த்ததற்கு விரோதமாக என்னைக் கனிவுடனும் அன்புடனும் வரவேற்றாள் பார்வதியம்மாள். எப்பொழுதும் வசவு வாங்கிப் பழகியிருந்த எனக்குக் கனிவு நிறைந்த வரவேற்பு மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தது. கூண்டிலடைபட்ட பறவை விடுதலை பெற்ற பிறகு சிறகடித்துச் சுதந்திரமாகப் பறப்பது போல் நானும் அவ்வீட்டில் பூரண சுயேச்சையுடன் சுற்றி வந்தேன். என்னை மிக்க அன்புடனேயே நடத்தி வந்தாள் பார்வதியம்மாள். தாய்க்கு மேலாக என்மீது அன்பைச் சொரிந்தாளென்றால் கேட்பானேன்?

## 2

ஒரு நாள் மாலை ஐந்து மணியிருக்கும். மஞ்சள் வெய்யில் பட்ட இடமெல்லாம் பொன் மயமாகிக் கொண்டிருந்தது. இளங் காற்றில் அசைந்தாடும் கொன்றை மரக் கிளை நுனியிலே உள்ள தளிர்கள், அவற்

னமே இல்லை. கொஞ்ச நாளில் இவ்வூர் பாலைவன மாவதைப் பார்க்கப் போகிறீர்கள்!'' என்றான்.

"மறுபடியும் பழைய கதைதானே! என்ன தான் என்னைச் செய்யச் சொல்கிறீர்கள்?'' என்றார் ஜமீன்தார் கொட்டாவி விட்டுக் கொண்டே!

ராமன் அம்பலக்காரன் ஊர்ப்பக்கமாக திவட்டியைக் காண்பித்துக் கொண்டே "நீங்களே வந்து பாருங்களேன்!'' என்றான்.

கூட்டத்தினர் எல்லோரும் சேர்ந்து கேட்டுக் கொண்டதன் பேரில் ஜமீன்தார் கிராமத்துக்குப் போனார்.

அங்கே சென்று பார்த்தபோது, ஜமீன்தாருக்கு விஷயம் எவ்வளவு தூரத்துக்கு முற்றிவிட்டது என்பது புரிந்தது. இந்தக் கூட்டம் போய்ச் சேருவதற்குள் நரிகள் எல்லாம் ஓடிவிட்டன. எனினும், நரிகள் வீட்டுக்குள் புகுந்து தானியங்களைக் கொள்ளையடித்ததையும், சாப்பாட்டுச் சாமான்களைப் பாழ் செய்திருந்ததையும் ஆடு கோழிகளைக் கொன்று திருடிச் சென்றதையும் பற்றி ஊர் ஜனங்கள் சொல்ல ஜமீன்தார் கேட்டார். இப்போது அவர்கள் கூறியதில் அவநம்பிக்கை ஏற்படவில்லை. ஆயிரக்கணக்கான நரிகள் திடீர் என்று அவர்கள் மீது படையெடுத்து அவர்களையும், அவர்களுடைய குழந்தைகளையும் காயப்படுத்தியிருப்பதைப் பார்த்தார். பெண்கள் 'ஓ' என்று அழுது கொண்டே, உடைந்த பானைகளையும் நரிகள் காயப்படுத்திச் சென்ற தங்கள் குழந்தைகளையும் காண்பித்ததைக் கண்டார். ஆனால் வர வர அவர்கள் அழுகை அதிகமாகப் போய் விட்டது. கடைசியில் ஜமீன்தார் ஒரு 'அதட்டு' அதட்டித்தான் அவர்கள் அழுகையை நிறுத்த வேண்டியதாயிற்று. பிறகு நரிகள் உபத்திரவத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றத் தம்மாலான உதவியைச் செய்வதாக நம்பிக்கை யூட்டி விட்டு, தம் குடிசைக்கு வந்து சேர்ந்தார்.

மறுநாள் காலை வண்டியில் தமது பங்களாவுக்குப் போய்க் கொண்டிருந்தபோது, அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. அந்த யோசனையை உடனே காரியாம்சத்தில் நிறைவேற்ற விரும்பினார். அரை விநாடி கூட அவர் வீணாக்க விரும்பவில்லை. 'அடுத்த ஒரு மாதத்துக்குள், ஐம்பது நரிகளைக் கொன்று கொண்டு வருபவர்களுக்குப் பத்து ரூபாய் வீதம் பரிசளிக்கப்படும்' என்று தண்டோரா போட்டுச் சுற்று வட்டாரங்களிலுள்ள எல்லாக் கிராம மக்களும் அறிய விளம்பரப்படுத்தினார். (தொடரும்)



ஜமீன்தாரின் அக்கிரமமான இவ் வார்த்தைகளைக் கேட்டு நாட்டாண்மைக் காரனுக்கு அவர்மேல் வெறுப்புத்தான் ஏற்பட்டது. இருந்தாலும் அதைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, "ஐயா, ராமன் சொன்னால் சந்தேகப்படலாம். ஆனால் நான் சொன்னால் கூடவா சந்தேகப்படுவீர்கள்? இந்த மாதிரி கதைகள் கட்டி விட்டு உங்களை ஏமாற்ற நாங்கள் என்ன குழந்தைகளா? நீங்களே வந்து வயல்களை உங்கள் கண்ணாலேயே பாருங்கள்! பார்த்துவிட்டு, இந்த நரிகளிடமிருந்து எங்களைக் காப்பாற்ற ஏதாகிலும் வழி செய்யுங்கள்! இல்லாவிட்டால் நாங்கள் ஊரை விட்டே போக வேண்டியதுதான்" என்றான் பிச்சைமுத்து.

"இந்த ஊரை நல்ல நரிக்காடு என்று தானே அழைக்கிறீர்கள். அதன்படி இந்த ஊரில் உள்ள நரிகள் நல்ல நரிகள் என்றுதானே அர்த்தம்! இப்போ என்னடா என்றால் நீங்கள் எல்லோரும் சேர்ந்து அந்த நரிகள் எல்லாம் கெட்டுப் போய்விட்டன என்கிறீர்களே?" என்று கூறி, அதிலுள்ள ஹாஸ்யத்தை அவரே அனுபவித்துச் சிரித்தார்!

பிச்சைமுத்து விடவில்லை; அதே கம்பீரத்துடன் "நீங்கள் நல்ல நரி என்று வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள்; கெட்ட நரி என்று வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். அதைப் பற்றி எங்களுக்கு அக்கறையில்லை. ஆனால் இது மட்டும் என்னால் உங்களுக்கு நிச்சயமாகச் சொல்ல முடியும் உடனடியாக அந்த நரிகளை யெல்லாம் சுட்டுக் கொன்றால் அன்றி எங்களுக்கு இந்த ஊரில் அமைதி ஏற்படாது!" என்றான்.

ஜமீன்தார் கத்தினார்:—

"என்ன! என்னை நரிகளையா சுடச் சொல்லுகிறாய்! இது புதுச் சட்டத்தில் இல்லை என்று நினைக்கிறேன்! சட்டத்திலிருப்பதற்கு மேலே ஒரு வசதி கூடச் செய்து தர மாட்டேன்!...நான் ஏன் செய்து தரவேண்டும்? யார் எனக்குக் குத்தகைக்கு மேலே ஒரு மணி நெல் அளந்திருக்கிறான்? ஏன், பார்க்கப் போனால், என் தகப்பனார் இறந்ததிலிருந்து, எனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியதை விடக் குறைவாகவே பெற்று வருகிறேன். நரிகளைச் சுடணுமாம்! ஏன், அப்புறம் 'எறும்புகளைச் சுடுங்கள்; எறும்பு எங்கள் பயிர்களை அழிக்கிறது' என்பீர்கள்!"

அங்கே யிருந்தவர்கள் மௌனமாக இதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஜமீன்தாரிடம் கண்ட பரிவின்மையை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. ஆனால் அவர் கூறியதில் அவர்கள் அவநம்பிக்கை கொண்டதுதான் அவர்களை ரொம்பவும் பாதித்தது. அவரை ஏமாற்ற விரும்புவதாக வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். அவருக்குச் சேர வேண்டியதைச் சரியாகக் காலாகாலத்தில் கொடுப்பதில்லை என்று வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். ஆனால் மாதுவும் அவன் தோழர்களும் இழைத்த கொடுமையைப் பற்றிய கதையை அவர் நம்பவில்லை என்றால், அது ஏதோ, அவர்களுக்கு ஒரு மன்னிக்க முடியாத தீங்கு இழைத்து விட்டதாகவே பட்டது.

ஜமீன்தார் அன்றிரவு தமது சவுக்கண்டியில் தூங்கிக் கொண்டிருந்தார். விடியற்காலை வெகு சீக்கிரம் எழுந்து அன்று முழுதும் வயல்களிலும் வரப்புகளிலும் வெகு தூரம் நடந்து விட்டு வந்ததால் அலுத்து, அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். அவர் முகாம் போட்டிருந்த குடிசை வாசலில் வண்டிக்காரன் வெறும் தரையில் படுத்திருந்தான். அவன் அவர் குடும்பத்தின் நம்பிக்கையுள்ள வேலைக்காரர்களில் ஒருவன். வாசலில் படுத்துக் கொண்டிருந்ததின் நோக்கமே ஜமீன்தார் மீது ஒரு கண்ணும், வாசலில் வைக்கோல் தின்று கொண்டிருந்த வண்டி மாடுகள் மீது ஒரு கண்ணும் இருக்க வேண்டும் என்பதுதான். ஆனால் பெரும்பாலும் அவனுடைய இரண்டு கண்களும் மூடியேயிருந்தன!

'திடீர்' என்று பக்கத்தில் பெரிய சத்தம் கேட்கவே இருவரும் தூக்கம் கலைந்து எழுந்தார்கள். மூங்கில் கட்டில் தூங்கிக் கொண்டிருந்த ஜமீன்தார் உலுக்கி எழுந்திருந்து, தம்மை இருட்டில் இரண்டு கை நீட்டித் தேடிக்கொண்டிருந்த வேலைக்காரனைப் போய்க் கட்டிக் கொண்டார்!

எப்படியோ இரண்டு பேரும் குடிசைக்கு வெளியே வந்து சேர்ந்தார்கள். பெருத்த சத்தத்தோடு, இப்போது தூரத்தே செந்தீ தெரிவதையும் பார்த்தார்கள். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் ஒரு ஜனக் கூட்டம் கைகளில் தீப் பந்தம் ஏந்தி வருவது நன்றாகப் புலனாயிற்று. கூட்டம் வேகமாக அவரை நோக்கி நெருங்கி வந்தது. அந்தக் கூட்டத்தில், ஊர் நாட்டாண்மைக்காரனும், அவனுடைய தோழர்களையும் ஜமீன்தார் பார்த்தார்.

பிச்சை முத்து கையில் பிடித்துள்ள தீவட்டியின் அனல் தாங்காது வேர்த்து விட்டுக் கொண்டே ஜமீன்தாரைப் பார்த்து, "தயவு செய்து எங்களுடன் வாருங்கள். இந்தமாதிரி அக்கிரமம் நடக்கும்வரை, இவ்வூரில் இருந்து பிரயோஜ

கும் பங்குண்டு என்றுதான் தீர்மானித்திருப்பார்கள்.

ஆகவே, மாது மனவருந்த நேர்ந்ததற்கும், ஊரை விட்டுச் சென்றதற்கும் காரணமாக இருந்த ஊர்வாசிகளைப் பழி வாங்கும் எண்ணத்துடன் நரிகள் இவ்விதம் செய்திருக்கின்றன என்பது தெளிவாகத் தெரிந்தது. இதில் மாதுவின் சம்பந்தம் எள்ளத்தனையும் கிடையாது என்பதும் அவர்களுக்குப் புரிந்து விட்டது. இருந்தும் ஏனோ அவன் மேல் முன்பிருந்ததை விடப் பத்து மடங்கு அதிகமாகத்தான் அவர்களுக்குக் கோபம் வந்தது!

ஊருக்கு யாராகிலும் புதிதாக வருகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்களால் நரிகள் இப்படி வயல்களை நாசம் செய்து விட்டன என்பதை நம்ப முடியுமா? வயல்கள் இப்படியானதற்குக் காரணம் மழை பெய்யாமையாக இருக்கலாம்; பயிர்களுக்கு நோய் ஏற்பட்டிருக்கலாம்; அல்லது பூச்சி அரித்திருக்கலாம் என்றெல்லாம் புத்திசாலித்தனமான காரணங்கள்தான் கூறியிருப்பார்கள். ஏன், திடீரென்று விஜயம் செய்த ஜமீன்தாரே நல்ல நரிக்காட்டு வாசிகளின் கதையைக் கேட்டு நம்பாமல் கேலிதான் செய்தார்.

இந்தச் சோகக் கதையைப் பலத்தகுரலில் பிரலாபித்தவன் ராமன் அம்பலக்காரன். அவனைப் பார்த்து "இந்த வருஷம் எனக்குக் கொடுக்க வேண்டியதை ஏமாற்ற இந்தமாதிரியெல்லாம் கதை கட்டி விடுகிறாய்" என்று கோபித்துக் கொண்டார்.

ராமன் அம்பலக்காரனோ வயல் பக்கம் கையை நீட்டி "எஜமான், நீங்களே வயலை வந்து பாருங்கள்! நாங்கள் வேண்டுமானால் பொய் சொல்லலாம். பயிர்கள் கூடவா பொய் சொல்லும்? நாங்கள் நட்ட நாற்றுகள் எல்லாம் வாடி வதங்கி வயலில் கிடப்பதை நீங்களே வந்து பாருங்கள்" என்றான்.

"நீங்கள் மாதுவைப் பற்றிக் கட்டி விடும் கதை இருக்கிறதே, ரொம்பவும் ஆச்சரியமாயிருக்கிறது. எனக்கோ 'மாது' என்று ஒரு பையன் கூட இருந்தானோ என்பதே சந்தேகமாக இருக்கிறது. ஆனால் நீங்களோ, அவன் பெயரைச் சொல்லி என்னைக் கொள்ளையடிக்க வேண்டும் என்று பார்க்கிறீர்கள். எனக்குச் சேர வேண்டியதைக் கொடுக்காமல் ஏய்க்க வேண்டும் என்று பார்க்கிறீர்கள். உங்கள் ஆட்டுக் கதைக்கு இதைத் தவிர வேறு ஒரு அர்த்தமும் கிடையாது!" என்று கோபத்துடன் கூறினார் ஜமீன்தார்.



போய் வருகிறேன்' என்று கையை ஆட்டினான். என்ஜின் 'கூ' என்று ஒரு முறை கூவிவிட்டு, கார்டு, டிரைவர், ஸ்டேஷன் வேலைக்காரன், மாது ஆகிய நால்வரையும் ஏற்றிக் கொண்டு சென்றது. ரயில் போன பிறகு அங்கே என்ன நடந்தது என்பது ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவருக்குத் தான் தெரியும்.

* * *

ரயில்வே ஸ்டேஷனை விட்டு 'குப் குப்' என்ற சத்தத்துடன் வண்டி நகரத் தொடங்கியதும் நரிகள் யாவும் பரிதாபமாக ஊளையிட்டன. அதைப் பார்ப்பதற்கு நன்றியுள்ள நாய்கள் தங்கள் எஜமானனின் பிரிவு ஆற்றாது பிரலாபிப்பது போலிருந்தது. நரிகள் யாவும் தம் பின் கால்களில் அமர்ந்து முகத்தைமேல் நோக்கி நீட்டிக் கூவின. சற்று நாழிகை இவ்விதம் தங்கள் ஆற்றாமையைத் தெரிவித்துக் கொண்ட பிறகு, பிளாட்பாரத்தை விட்டு இறங்கித் தண்டவாளத்தைக் கடந்து அழுதுகொண்டும், புலம்பிக்கொண்டும் பனைமரக் காடுகளில் ஓடி மறைந்தன அந்த நரிகள் எல்லாம்.

கடைசி நரி கண் பார்வையிலிருந்து மறையும் வரை ஸ்டேஷன் கூரையின் மீது ஏறிப் பயத்துடன் உட்கார்ந்திருந்த மனுஷர் இறங்கவே இல்லை. இறங்கவும் அவருக்கு வழியில்லை. கூரைமீது சார்த்தி வைக்கப்பட்டிருந்த ஏணியும் பிளாட்பாரத்தில் ஏதோ ஒரு நரி மோதி கீழே தள்ளிவிட்டது. ஆகவே அந்த அபாக்கியசாலி, பாவம், கூரை மீதிருந்து கீழே குதிக்க வேண்டியதாயிற்று.

தரையை மிதித்ததும், அவர் இரும்புக் கதவைப் பூட்டுவதற்கோ, தமது அறையைப் பூட்டுவதற்கோ ஒரு கணம் கூடத் தாமதிக்கவில்லை. உத்தரவின்றி ரயில்வே எல்லைக்குள் நுழைந்தவனை ரயில்வே வேலைக்காரன் விரட்டினால் எப்படி ஓடுவானோ அவ்விதம் பிளாட்பாரத்தை விட்டு ஒரு குதி குதித்து, வீட்டுக்குச் செல்லும் ஒற்றையடிப் பாதையில், பயத்தில் நடுங்கிக்கொண்டே ஒரே ஓட்டமாக ஓடி வீடுபோய்ச் சேர்ந்தார்.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு ஸ்டேஷன் மாஸ்டரும், ரயில்வே வேலைக்காரனும், அவர்கள் கேட்டுக் கொண்டபடி உடனே வேறு ஸ்டேஷனுக்கு மாற்றப் பட்டார்கள் என்று அறிகிறோம். மேலும், புது ஸ்டேஷனுக்குப் போய் வேலை ஒப்புக் கொண்டதும் ஜுரம் வந்து படுத்த படுக்கையாகி விட்டார்களாம். அந்தப் பயங்கர அனுபவத்திலிருந்து தெளியச் சரியாக ஒரு மாதமாயிற்று என்றும் நம்பத்தகுந்த இடங்களிலிருந்து செய்தி வந்திருக்கிறது.

ஆயினும் காலம் பழைய சம்பவங்களுக்குப் புது மெருகு தருகிறது. இப்பொழுதெல்லாம் அவர்கள் அந்த ஹாஸ்யச் சம்பவங்களைப் பற்றிக் கூறும்போது பயந்து நடுங்குவதில்லை; சிரித்துக் கொண்டு கூறுகிறார்கள் என்று கேள்விப்பட்டு மகிழ்கிறோம்.

## 14. பழிவாங்கு படலம்

நான் இலங்கைக்குப் போய்விடப் போவதாக மாதவன் மிரட்டியபோது, நல்ல நரிக்காட்டு வாசிகள் அதை ஒரு பெரிய விஷயமாகக் கருதவில்லை. அவர்களைப் பொறுத்தவரை அவன் அங்கு இருப்பதற்கும் இல்லாமலிருப்பதற்கும் ஒன்றும் வித்தியாசமிருக்கவில்லை. ஆமாம், இந்தச் சோம்பேறி, விஷமக்காரச் சிறுவனால் அவர்களுக்கு என்ன பிரயோஜனம்? மாதவனுடைய நூற்றுக்கணக்கான பயங்கர வேடிக்கை விளையாட்டுக்களை எண்ணிப் பார்த்தபோது, அவர்களை விட்டு அவன் கடல் கடந்து செல்வது எவ்வளவோ நல்லது என்றுதான் எண்ணினார்கள்.

ஆனால் அவர்கள் வெகு சீக்கிரத்திலேயே, அவன் இருப்பதைவிட, அவன் மறைவு மிகவும் ஆபத்தானது என்பதை உணர்ந்தார்கள். தென்னந் தோப்பில் மாதுவையும் நரிக்கூட்டத்தையும் சந்தித்த சம்பவத்துக்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு, ஒரு நாள் காலை பிச்சைமுத்து கம்பங்கூழ் சாப்பிட்டு விட்டு வயலுக்குப் போயிருந்தான். அங்கே தன் சோளக் கொல்லையிலும் கடலைக் கொல்லையிலும் கண்ட காட்சி, தைரியசாலியான பிச்சைமுத்துவின் கண்களிலும் கண்ணீர் துளிக்கச் செய்துவிட்டது. எங்கே கண்டாலும் பயிர்கள் பிடுங்கி எறியப் பட்டிருந்தன. வயல்களில் முளைத்திருந்த பசும் நாற்றுக்களையெல்லாம் ஆயிரக் கணக்கான ஆடு மாடுகள் மிதித்து நாசம் செய்துவிட்டுப் போயிருந்தாற் போலிருந்தது.

இவ்விதம் அவன் வயல் மட்டும் அழிக்கப்பட்டிருக்கவில்லை. ஒவ்வொருவர் வயலும் அப்படித்தான் இருந்தது. இதைப் பார்த்ததும், மாது புறப்பட்டுச் சென்றதில் ஆத்திரமடைந்த நரிகளின் வேலைதான் இது என்று 'பளிச்'சென்று புரிந்தது. ஆமாம், மாது புறப்பட்டுச் சென்றதைப் பற்றியும் பனங்காடு ரயிலடியில் நரிகள் வழி யனுப்பியதையும் கேள்விப்பட்டிராவிடில் இந்த நாச வேலையில் நரிக்காட்டு வாசிகள் மாதுவுக்

# நரிக்காட்டு ராஜா

எஸ். கோபாலன்

மொழிபெயர்ப்பு. எஸ்.வி.எஸ்




இந்த நரிகளை விரட்டப் பார்ப்பது அசட்டுத்தனம் என்பதை ஸ்டேஷன் மாஸ்டர் உணர்ந்து விட்டார். பையனை வழியனுப்பத்தான் நரிகள் வந்திருக்கின்றன என்பது அவருக்குத் தெளிவாகப் புரிந்து விட்டது. அவைகளின் நடத்தைக்கு வேறு எவ்விதப் பொருளும் இருக்க முடியாது. பையனை, இவையெல்லாம் பற்றி விசாரிக்கலாம் என்றாலோ, அதற்கு நேரமில்லை. வண்டி வருவதற்கு ஒரே ஒரு நிமிஷம் தான் இருந்தது. ஆனால் அவருக்கு உள்ளுக்குள் ஒரு பயம். பையனை ஏற்றிக் கொண்டு ரயில் புறப்பட்ட பிறகு 'இந்த நரிகளிடை நம் கதி என்ன வாகுமோ' என்று ரொம்பவும் நடுங்கிக் கொண்டிருந்தார்.

இனியும் ஒரு இமைப் பொழுது வீணாக்க முடியாது. சௌகரியமான இடம் எங்கேயாகிலும் இருக்கிறதா என்று சுற்று முற்றும் பார்த்தார். அதிர்ஷ்டவசமாக, கூரை மீது ஏறி விளக்கு ஏற்றுவதற்கென்று ரொம்ப காலமாக சார்த்தி வைக்கப்பட்டிருந்த இரும்பு ஏணியைப் பார்த்தார். அந்த ஏணியை உபயோகப்படுத்தியதே கிடையாது. ஏனெனில் அந்த விளக்கை ஏற்றியதே கிடையாதே! அந்த ஏணிக்குப் போய்க் கூரை மேல் ஏறிவிட்டார் ஸ்டேஷன் மாஸ்டர். தம்முடைய வேலைக்காரனையும் தம்மைப் போலவே செய்யும்படி கையையும் காலையும் ஆட்டி அபிநயம் பிடித்தார்.

ஆனால் அவனால் அப்படி செய்ய முடியாது. அவன் பிளாட்பாரத்தின் ஒரு மூலையிலிருந்தான். அங்கிருந்து இங்கே வர வேண்டுமென்றால் நரிகளின் முதுகின் மேல் அடி எடுத்து வைத்துத் தான் வர வேண்டும். ஒரு அங்குல இடைவெளியில்லாது நரிகள் அடைந்து நின்று கொண்டிருந்தன.

ஆனால் அவனோ உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கிக் கொண்டிருந்தான். வண்டி 'கூப் கூப்' என்று உள்ளே நுழைந்த போது சம்பந்தா சம்பந்தமில்லாமல் கூவத் தொடங்கினான்; பரிதாபமாக அலறத் தொடங்கினான். ஒரு பைத்தியக்காரன் மாதிரி ஓடி, வண்டியில் கால் வைக்கும் பலகையில் ஏறிக் கொண்டான். 'டிரைவர்' எவ்வளவோ தடுத்தும் கேட்கவில்லை.

வண்டி நின்றது. என்ஜின் டிரைவர், 'கார்டு' இருவரும் நரிகளின் கூட்டத்தையும், அவற்றின் தலைவன் மாதுவையும் பார்த்துவிட்டு அப்படியே பிரமித்துப் போய்விட்டார்கள். பெட்டியில் சௌகரியமாக உட்கார்ந்திருந்த வேலைக்காரன் கூடப் பாதி திறந்திருந்த ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தான். ஸ்டேஷன் மாஸ்டர் கூரைமீது உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். உடனே நரிகள் அவ்விடத்தை விட்டு இன்னும் போகவில்லை; ஆகவே இறங்குவது என்பது முடியாத காரியம் என்று தீர்மானித்துப் பாதி மூடியிருந்த ஜன்னலை முழுதும் மூடிவிட்டான்.

காலியாக இருந்த நான்கு பெட்டிகளில் ஒன்றில் மாது ஏறிக் கொண்டு நரிகளைப் பார்த்துச் சந்தோஷமாக 'நான்

அதன் பயனாக "என் சரித்திரம்" என்ற புஸ்தகம் இப்போது நம் கைக்கு வந்திருக்கிறது.

ஐயரவர்கள் குமாரர் கலியாணசுந்தரம் ஐயர் அவர்கள் மிக்க சிரத்தை எடுத்துப் புஸ்தகத்தை வெளியிட்டிருக்கிறார்கள். நல்ல காகிதத்தில் அழகான கட்டிடத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். 1040 பக்கங்கள். எந்தப் புஸ்தகாலயத்தையும் அலங்கரிக்கக்கூடிய புஸ்தகம். எந்தத் தமிழர் வீட்டு அலமாரியிலும் அவசியம் இருக்க வேண்டிய புஸ்தகம்.

* * *

பள்ளிக்கூடங்களில் "ஹிஸ்டரி"ப் புஸ்தகங்களைப் படித்துப் படித்து நம்மவருக்கு இயல்பாய் உள்ள சரித்திர உணர்ச்சி வறண்டு போய்விட்டது. கால ஓட்டத்திலே பின்னேறிப் போய்ப் பழைய காலத்து விஷயங்களைக் காட்சியாகக் கண்டு அனுபவிக்கும் தன்மை இல்லாமலே போய்விட்டது.

அதற்கு ஒரு நல்ல மருந்தாக உதவும் "என் சரித்திரம்."

ஐம்பது அறுபது வருஷங்களுக்கு முன் சாதாரண மக்கள் என்ன, பிரபுக்கள் என்ன, ஜமீன்தார்கள் என்ன, மடங்கள் என்ன, எல்லாருமாக எவ்வளவு பக்தியோடு தமிழை வளர்த்தார்கள், தமிழ்ப் புலவரை ஆதரித்து வந்தார்கள் என்பதே மனசுக்கு உவந்த சரித்திரம்;—அரசியல் சரித்திரம் அல்ல.

அரசியல் சரித்திரம் இன்னதென்பதோ நமக்குத் தெரியும்: மக்களுடைய அறியாமை, குதடி, மோசடி, கொடுமை, துன்பம் இவைகளைத் தொகுத்துச் சொல்லுவதுதான் அரசியல் சரித்திரம்.

உண்மையான தேச சரித்திரம் என்றால் கலைஞர்களும் கவிஞர்களும் செய்துள்ள சமுதாயக் கட்டுக் கோப்பைக் குறிப்பதுதான். அதாவது ஒரு சிருஷ்டி தத்துவம் தொழில் செய்வதைச் சரித்திரத்தில்ப் பார்க்கிறோம்.

* * *

மேலே கண்டபடி தமிழ் வளர்ந்து வந்த காலத்தில், தந்தையாரின் அரிய முயற்சியால்த் தமக்குத் தமிழ் கற்க வாய்த்தது பற்றியும், தமிழ்ப் பண்பாடு காரணமாகத் தமக்கு விரந்தரமான மனச் சாந்தி கிடைத்தது பற்றியும் ஐயர் அவர்கள் பாடியிருக்கிறார்கள்.

இந்த உணர்ச்சிகளை எழச் செய்தது ஐயர் அவர்களுடைய அருமைத் தந்தையாரின் மரணந்தான்.

பாடலைப் பார்க்கலாம்:

"பற்றலெங்கே செந்தமிழைப்
 பற்றிக்கற் றேர்பலர்பால்

துற்றலெங்கே, மீனாக்ஷி
 சுந்தரநல் ஆரியன்பாற்

கற்றலெங்கே, கற்றுக்
 கவலையொரீஇ அந்நிலையே

நிற்றலெங்கே இன்றுவரை
 நீயருள்செய் யாவிடிலே!"

அப்படி ஆட்கொண்டிருக்கிறது ஐயர் அவர்களைத் தமிழ்!

பிறகு வியப்பில்லை. அவர்கள் இராப் பகலாய், வியாழ வட்டங்களாகத் தமிழ் ஏடுகளைத் தேடியதிலும், செறிந்து கிடந்த பிழைகளுக்கு ஊடே உண்மைப் பாடங்களைக் கண்டதிலும், அழகான புஸ்தகங்களாக வெளியிட்டதிலும் வியப்பில்லைதான்!

அத்தகைய தொண்டு செய்யப் பெறுதிருந்தால் அந்தப் புஸ்தகங்களை நாம் பார்ப்போமா? நம் கையில் அமரு'மா அவைகள்? நம்முடைய அலமாரிகளை அலங்கரிக்குமா?

ஐயர் அவர்கள் செய்துள்ள தமிழ்த் தொண்டை ஆர்வத்தோடு அனுபவித்தவர் கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள். ஐயர் அவர்கள் மறைவின்போது,

"சித்திரத்திற் பார்ப்போம்
 சிலைசெய்து கும்பிடுவோம்

புத்தகத்திற் போற்றிப்
 புகழ்ந்திடுவோம்—இத்தரையில்

சந்தப் பொதிகைத்
 தமிழ்முனிஎன் றுன்னைநிதம்

சிந்தையிற் கொள்வோம்
 தெளிந்து"

என்று உள்ளம் கனிந்து பாடினார்கள் கவிஞர் அவர்கள். அந்த நன்றியில் நம்முடைய உள்ளமும் இன்று கலந்து கொள்ளுகிறது.

[டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் எழுதிய "என் சரித்திரம்." கிடைக்குமிடம்: எஸ். கலியாண சுந்தரமய்யர், தியாகராஜ விலாசம், திருவட்டீசுவரன் பேட்டை, சென்னை: பக்கம் 1040. விலை ரு. 8—0—0]

தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் எத்தனையோ அரிய தொண்டுகள் ஆற்றியிருக்கிறார்கள். அவை யெல்லாவற்றுக்கும் சிகரமாக விளங்குவது அவர்கள் தம் சுய சரிதையை "என் சரித்திரம்" என்னும் தலைப்புடன் எழுதியதாகும். அந்த அருமையான புத்தகத்தை ஐயர் அவர்களின் குமாரரான ஸ்ரீ கல்யாண சுந்தரமய்யர் இப்போது வெளியிட்டிருக்கிறார். அந்த நூலுக்கு ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் விமரிசனத்தைக் கீழே காணலாம்.

# என் சரித்திரம்

[ டி. கே. சி. ]

ஆங்கிலப் புலவர்களுடைய அனுபவங்களை அனுபவிக்க நம்மால் முடியுமோ முடியாதோ, சொல்ல முடியாது.

ஆனால், தமிழ்ப் புலவர்களுடைய அனுபவங்களைச் சொல்ல ஆரம்பித்து விட்டால் நாம் கேட்டுக் கொண்டே இருக்கலாம்.

சிறு பையனாக மூன்றாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்தபோது புனல்வேலி ராமசாமி பாரதி என்ற புலவர் எங்கள் வீட்டுக்கு வருவார். வந்தால் பத்து நாளோ, இருபது நாளோ இருப்பார்.

அவர் பேச்சைக் கேட்கப் பலரும் வந்து கூடுவார்கள்.

புலவர் தம்முடைய அனுபவங்களை எடுத்துச் சொல்லிக் கொண்டிருப்பார்.

பள்ளிக்கூடத்திலிருந்து காலை 11 மணிக்கு வீடு திரும்புவேன். திரும்ப வேண்டியதுதான்; அப்படியே புலவரிடம் போய் உட்கார்ந்து கொள்ளுவேன்.

"அந்த ஜமீன்தாரிடம் போனேன், இந்த ஜமீன்தாரிடம் போனேன். அந்தப் பாட்டை அங்கே பாடினேன். இந்தப் பாட்டை இங்கே பாடினேன்" என்று சொல்லிக் கொண்டிருப்பார்.

"அந்தப் புலவர் ஒரு பாட்டுப் பாடினார். அதற்கு மாறாக இந்தப் பாட்டை நான் பாடினேன்" என்று சொல்லுவார். எனக்கு வெகு ரஸமாய் இருக்கும். சாப்பிடப் போகத் தோன்றாது. இரண்டு மணிக்குப் பள்ளிக்கூடம் போய்த் தொலைய வேண்டுமே என்றுதான் இருக்கும்.

புலவரை விட்டுப் போவது ரொம்பக் கஷ்டமாய் இருந்தது. புலவர்களுடைய விருத்தாந்தத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும் ஆசை வயதாக ஆக அதிகமாய்த்தான் ஆய்க் கொண்டிருந்தது.

இந்த நிலைமையில் மகாமகோபாத்யாய டாக்டர் சாமிநாதய்யர் அவர்களுடன் பழகும் பாக்கியம் கிடைத்தது.

சந்திக்க நேர்ந்த போதெல்லாம் ரஸமான அனுபவங்களை அழகாய் எடுத்துச் சொல்லுவார்கள் ஐயர் அவர்கள்.

சில வேளைகளில் இரண்டு மணி நேரம் மூன்று மணி நேரம் அநுபவங்களைச் சொல்லிக் கொண்டிருப்பார்கள். கேட்டுக் கொண்டே இருப்பேன்.

எல்லாம் தமிழனுக்கு அபூர்வமான விஷயங்கள், மறக்க ஒண்ணாத விஷயங்கள்.

கடைசியாக நான் சென்னையில் இருக்க நேர்ந்தபோது கல்கி அவர்களும் நானுமாக ஐயர் அவர்களை அடிக்கடி போய்ப் பார்ப்பதுண்டு. ஐம்பது அறுபது வருஷத்து அனுபவங்களை ஐயர் அவர்கள் சொல்லக் கேட்பதில் எங்களுக்கு மிக்க ஆசை. வெறி என்றே சொல்லலாம் அதை!



அந்தச் சந்தர்ப்பங்களில் ஐயர் அவர்களிடம் நாங்கள் அந்தனை விஷயங்களையும் எழுத்து வடிவத்துக்குக் கொண்டு வந்தால் எவ்வளவு பிரயோசனமாய் இருக்கும் என்று அடிக்கடி சொல்லி வந்தோம்.

ஐயர் அவர்களுக்கும் வாஸ்தவந்தான் என்று பட்டது. எழுத ஆரம்பித்தார்கள். ஆனந்த விகடனில் கட்டுரைகளாய் வெளி வந்தன.

நோக்கிக் கொண்டிருந்தன. அரைக் காக்கிச் சட்டையும், கிஜாரும் அணிந்திருந்த பழைய 'பாயின்ட்ஸ்மேன்' தோற்றத்திற்கும், இவனது தற்போதைய தோற்றத்திற்குந்தான் எவ்வளவு வித்தியாசம்!

ஆகா! ஒரே ஒரு விஷயம் சொல்ல மறந்து விட்டேனல்லவா? புரட்சிக்கார துரையப்பன் எதற்காக ஓடிச் சென்று ரயிலை நிறுத்தினான் என்பதெல்லாம் நமக்கும் ஒரு சாதாரணச் சந்தேகம் தானே? அதையும் கூறிவிடுகிறேன்:

கடைசி நிமிஷம் வரையில் சகாக்களுடன் தானும் பங்கெடுத்துக் கொண்ட அந்தக் கைங்கரியத்தைப் பற்றி அவனுக்கும் பெருமைதான். அதன் பரபரப்பான செய்திக்காக அவன் உள்ளம் துடித்துக் கொண்டுதா னிருந்தது. கைகாட்டியை இறக்கி விட்டுத் திரும்பிய பின்னருங்கூட அந்த வெள்ளை துரைகளைப் பற்றி எண்ணி அவன் உள்ளம் புளகாங்கிதமடைந்து கொண்டிருந்தது. ஆனால், ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த கிழவன் சொன்ன செய்தியால் அவன் மனம் உடைந்து விட்டது. 'புரட்சிக்கும் காதலுக்கும்' நடந்த அரை விநாடி மனப் போராட்டத்தில் காதல் தான் வெற்றியடைந்தது. உடனே தலைதெறிக்க ஓடினான் துரையப்பன்.

இறங்கவேண்டிய வீட்டின் சமீபமாக ரயில் வண்டி நின்றால்—அதுவும் அர்த்த ராத்திரியில்—யார்தான் சௌகரியமாக இறங்க மாட்டார்கள்? அதே வண்டியின் கடைசி மூன்றும் வகுப்புப் பெட்டியில் தான் அவனது காதல் தெய்வமான அகிலாண்டம் வந்து கொண்டிருந்ததை அந்தக் கிழவன் அறிவித்திருந்தான்!

## காலக்ஷேபம்

### தலையணை!

"என்னடா, இது? போயும் போயும் பீப்பாயைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருக்கிறாயே?"

"வெறும் பீப்பாய் இல்லையடா! உன்னை நிறையப் பஞ்சு அடைத்திருக்கிறது!"

★

### அவமதிப்பு!

நீதிபதி:—நான் கைதியைக் குற்றவாளி என்று அபிப்பிராயப் படுகிறபடியால், அவனுக்கு ஆயுள் தண்டனை விதிக்கிறேன்.

கைதி:—அநியாயம்! அக்கிரமம்! கேள்வி முறை கிடையாதா?

நீதிபதி (கோபமாக):—மூடு வாயை! கோர்ட்டை அவமதித்ததற்காக இன்னும் இரண்டு வருஷம் கூடப் போட்டிருக்கிறேன், போ!

★

### பிடிக்கவில்லை!

ஹோட்டல்காரர்:—இங்கே உங்களுக்கு ரொம்ப சௌகரியமாயிருக்கும்; நீங்கள் உங்களுடைய வீட்டில் இருப்பது போலவே இருக்கும்.

அவர்:—ஐயையோ! வீட்டில் இருக்கப் பிடிக்காமல்தானே நான் இங்கு வந்தேன்? நீங்கள் இப்படிச் சொல்லி விட்டீர்களே!

### ஓஹோ!

ராமு:—என்னப்பா, சோமு! சினிமாவுக்குப் போயிருந்தேன் என்கிறாய். என்ன படம், என்ன கதை என்று கேட்டால் சொல்லத் தெரியவில்லையே! சினிமாவுக்குப் போகாமலே போயிருந்ததாகப் புளுகுகிறாயோ?

சோமு:—இல்லை; வாஸ்தவமாகவே சினிமாவுக்குப் போயிருந்தேன். ஆனால், என்னோடு என் மனைவியும் வந்திருந்தாள்!

★

### நல்ல விளம்பரம்!

வந்தவர் (கோபத்துடன் ஹோட்டல்காரரைப் பார்த்து):—ஏன் ஸார், உங்கள் ஹோட்டலுக்கு வர ஸ்டேஷனிலிருந்து ஐந்து நிமிஷம்தான் ஆகும் என்று பத்திரிகைகளில் பிரமாதமாக விளம்பரம் செய்திருக்கிறீர்கள். ஆனால் இப்பொழுது உண்மையில் எனக்கு ஒரு மணி நேரமாயிற்றே! என்னத்துக்காக இப்படிப் புளுகியிருக்கிறீர்கள்?

ஹோட்டல்காரர்:—ஓகோ! நீங்கள் ஸ்டேஷனிலிருந்து நடந்து வந்தீர்களாக்கும்! காரில் வருபவர்களுக்காகத்தானே நாங்கள் அந்த விளம்பரத்தைச் செய்திருந்தோம்!

பார்த்திருப்பார்கள்! அந்தப் பெருமைக் காகத் துரையப்பனைக் காருண்ய சர்க்கார் பாராட்டாமல் இருப்பார்களா?

அடுத்த ஸ்டேஷனுக்கு அறிவித்து 'காங்' ஆட்களைத் தருவித்துப் பாதையைச் சீர்திருத்த நான்கு மணி நேரம் பிடித்தது. தொடர்ந்தாற்போல் இருபது கெஜ தூரத்திற்குத் தண்டவாளத்தின் பிடிப்பிற்காகப் பொருத்தப் பெற்றிருந்த ஆணிகள் ஒன்று விடாமல் கழற்றப் பட்டுத் தண்டவாளங்கள் சந்தேகத்திற் இடமில்லாமல் வைக்கப் பெற்றிருந்தன.

மூன்று தினங்களுக்குப் பின் துரையப்பன் பூரணமாகக் குணமடைந்தான்.

'அன்றிரவு பத்து மணி சுமாருக்கு சிலர் சந்தேகமான ஆயுதங்களுடன் தண்டவாளத்தை நோக்கிச் சென்றதாகவும், என்ஜினின் விளக்கொளியில் தண்டவாளத்தினின்றும் சிலர் ஓடியது தெரிந்ததாகவும்' துரையப்பன் உறுதியாக வாக்குமூலம் கொடுத்தான். சர்க்கார் அவனது தியாகத்தைப் பாராட்டி அவனுக்காக ஆயிரம் ரூபாய் பரிசளித்தது. பணத்தைப் பெற்றுக் கொண்ட மறுவாரமே துரையப்பன் ரயில்வே இலாகாவிற்கு முழுக்குப் போட்டுவிட்டுக் கும்பகோணத்தில் வியாபாரத்தைத் துவக்கி விட்டான்.

ஆனால் அவன் சமாசாரம் எனக்கும் அவனது அந்தராத்மாவுக்குமல்லவா தெரியும்?

3

என் எட்டு வருஷத்திய சிந்தனைகளை ஒருவாறு முடித்துக் கொண்டு "அப்புறம் என்ன சேதி? மாரியம்மன் கோயிலுக்குப் போயிட்டு, 'டோல்கேட்டு' பிள்ளையாரையும் கும்பிட்டுவிட்டு ஊருக்குக் கிளம்பப் போறீங்களாக்கும்?" "இந்தோட என்னையும் மறந்துடுவீங்க, இல்லையா!" என்றேன்.

"அதென்னுங்க, அப்படிச் சொல்றீங்க! தினமும் ஒங்களைப்பத்தியேதான் பேச்சு. அடிக்கடி வந்து ஒங்களையும், குழந்தைகளையும் பார்க்காமப் போனா எங்களுக்கு இருப்புக் கொள்ளுங்களா?" என்று உரத்துக் கூறிக்கொண்டே அந்தப்பெண் சண்டைக்கு வந்து விட்டாள்.

"அதெல்லாம் சரி, அடுத்த தடவை வரும்போது நீ சும்மா வரக்கூடாது. கையில் குழந்தையுடன் வரவேண்டும்!" என்று நானும் அதற்கு மேல் கத்தினேன். அவள் தலைகுனிந்து கொண்டே மறுபுறம் திரும்பினாள். துரை விடை பெற்றுக் கொள்ளும்போது என் கண்கள் அவன் உருவத்தையே கூர்ந்து

துரையப்பனோ புரட்சிப் பாட்டுப் பாட வாரம்பித்து விட்டான்.

"இந்தப் பிரச்னைகளெல்லாம் நமக்கு எதற்கடா? நமது உத்தியோகங்களின் நிலைமையோ ஒன்றும் சொல்லத் தரமில்லை. அதிலும், கலியாணமாகி உனக்கு இன்னும் மூன்று மாதங்கள் கூட ஆகவில்லை. அவளுடன் சாவதானமாக இன்னும் ஒரு வேளைகூட நீ பேசியதில்லை. இதை யெல்லாம் மறந்து விடு. இதனாலெல்லாம் நமக்குச் சுதந்திரம் கிடைத்து விடாது" என்பேன்.

"இல்லை, ஸார்! புரட்சிதான் ஸார், வேண்டும். மனிதனுக்குச் சுதந்திர உணர்ச்சி வந்து விட்டால்..." என்று தொடர்ந்து ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பான் அவன்.

"ஏய்! நீ இந்தமாதிரி யெல்லா மிருந்தால் அப்புறம் மேலாவுக்கு உன்னைப் பற்றி நான்—" என்று ஒரு நாள் மிரட்டினேன்.

அவனோ சிரித்துக்கொண்டே, "இதற்கெல்லாம் பயந்தால் ஆகாது, ஸார்!" என்று சொல்லிக்கொண்டே ரயில் சாவியுடன் ஓடினான்.

அன்று செப்டம்பர் மாதம் முதல் தேதி. நேற்று நடந்தாற்போலவே தோன்றுகிறது. முதல் நாளெல்லாம் எங்கும் அராஜகங்கள் நடந்திருந்தன. பம்பாய் கவர்னரும், இன்னும் சில வெள்ளைத் துரைகளும் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டு எங்கள் ஸ்டேஷன் வழியாக அன்றிரவு சென்னைக்குச் செல்வதாக எனக்கும் சுற்றறிக்கை கிடைத்திருந்தது.

அர்த்த ராத்திரிக்கு மேல் வரப்போகும் அந்த வண்டியை நினைத்துச் சர்வ ஜாக்கிரதையுடன் என்னைத் தயார்ப் படுத்திக் கொண்டேன். துரையப்பனோ காலை முதல் யாருடனும் பேசவில்லை. உண்ணவுமில்லை, உறங்கவுமில்லை. பைத்தியங் கொண்டவன் போல் உட்கார்ந்திருந்தான். சற்று நேரத்திற் கொருதரம் வெளியே போவதும் உள்ளே வருவதுமாக அன்றிரவு பதினொரு மணி வரையில் பொழுதைப் போக்கி விட்டான்.

கடைசியில், அந்த நடுநிசி ரயில் வரும் வேளை நெருங்கிற்று. துரையப்பனை விரட்டியடித்துக் கைகாட்டியை இறக்கச் செய்து, 'பாயிண்'டையும் மாற்றச் செய்தேன். அவன் செய்துவிட்டுத் திரும்பிய சில விநாடிகளுக்கெல்லாமே வெகு தூரத்தில் 'கவர்னர்' வரும் வண்டியின் பிரகாசம் இருளைப் பிளந்து கொண்டிருந்தது.

ஸ்டேஷன் பிளாட்பாரத்துக்குள் ஸ்பத்தியம்போல் நின்று கொண்டிருந்த ஒரு கிழவன் சிரித்துக்கொண்டே கேலியாக துரையிடம் ஏதோ கூறினான். அவ்வளவுதான்; துரையப்பன் கையிலிருந்த சிவப்பு விளக்கைத் தூக்கிக் கொண்டு தண்டவாளத்தை யொட்டிச் சிட்டாய்ப் பறந்தான்.

அவன் ஓடிக்கொண்டே இருந்தான். ரயிலின் எதிர் விளக்கொளியில் கறுநிழல் போன்ற அவனது உருவம் பெரிய கைகாட்டியைக்கூடக் கடந்து சென்று விட்டதை நன்றாகத் தெரிவித்தது. வரப்போகும் அபாயத்தை நினைத்து என் இதயமே நின்றுவிடும்போலிருந்தது.

துரையப்பன் இன்னமும் ஓடிக் கொண்டுதானிருந்தான். அந்த நீண்ட அபாயக் குரல் 'என்ஜி'னின் கண்டத்திலின்றும் கிளம்பிற்று. அடுத்த கணம் விஷயம் விளங்கி விட்டது.

கைகாட்டியைத் தாண்டிச் சென்ற துரை பெருமூச்சு விட்டுக் கொண்டே சிவப்பு விளக்கை நீட்டினான். அடக்க முடியாத வேகத்தில் வந்து கொண்டிருந்த இயந்திரம் 'கிரீச்' சிட்டுக் கொண்டே இருபது கெஜ தூரம் ஓடிச் சென்று நின்றது. மண்டையில் பலமான அடியுடன் கீழே சாய்ந்தான் துரை!

இன்னும் ஓர் இரண்டு கெஜம். ஆறடி தான் பாக்கி! அதைக் கடந்திருந்தால் அந்த எட்டுப்பெட்டிகளிலுமிருந்த ஜனங்களும், வெள்ளைத் துரைகளும் கடவுளைப்




கலப்பாகவே யிருந்தது. அன்று சாயங்திரம், "ஸார், நானும் கோயிலுக்குப் போய்த் திருவிழா பார்த்து விட்டு......" என்று நீட்டி முழக்கினான் துரையப்பன்.

"அதெல்லாம் முடியாது; நாலரை மணி வண்டி வரப்போகிறது" என்றேன். பின்னும் அவன் கெஞ்சினான். நான் பிடிவாதமாக மறுத்தேன். ஆனால், அந்தத் தந்திரக்காரன் சும்மா விருக்கவில்லை. என் புத்திர சிகாமணிகளில் ஒன்றைத் தூண்டி விட்டுத் தன் காரியத்தைச் சாதித்துக் கொண்டான்.

மாலை ஏழு மணி சுமாருக்குத் துரையப்பன் திரும்பி வரும்போது, அவனைத் தொடர்ந்து ஒரு யுவதியும், அவளது தகப்பனும் ஸ்டேஷனுக்குள் நுழைந்தனர். அந்த வெளியூர் வாசிகள் இருவரும் அன்று காலைதான் ஸ்டேஷனிலிருந்து போயிருந்தனர். அவன் வெகு நாள் பழகியதுபோல் அவர்களுடன் அளவளாவிக் கொண்டே கும்பகோணத்துக்கு இரண்டு டிக்கெட்டுகள் வாங்கிக் கொடுத்தான். அவர்கள் எவ்வளவோ மறுத்துக் கூறியும் அவன் அவர்கள் சொன்னதைப் பொருட்படுத்தவே யில்லை.

பாவம், உற்றாரும் சுற்றாரு மில்லாத ஒரு யுவன் — அதிலும் பாட்டுப் பித்தங் கொண்ட அந்தப் பிரம்மசாரியின் உள்ளத்தில் 'காதல்' உதயமானதற்கு வரையறையா வேண்டும்? "அகிலாண்டம், அகிலாண்டம்!" என்று அவனது உள்ளம் ஸ்மரித்துக் கொண்டிருந்ததை அவனது முகத்தின் அழகு அம்பலப்படுத்திக் கொண்டிருந்தது.

சில காலமாக அவன் வாய் காதல் பாட்டுக்களை உதிர்த்துத் தள்ள வாரம்பித்தது. கடைசியில் தன் மனோரதத்தையும் அவன் பூர்த்தி செய்து கொண்டான். கலியாணத்திற்காக அரும் பாடுபட்டு மூன்று தினங்கள் லீவு வாங்கிக் கொண்டு கும்பகோணத்திற்குச் சென்று விட்டுத் திரும்பினான்.

## 2

**1942**-ம் வருஷம். நாடு கொந்தளித்துக்கொண்டிருந்தது. ரயில் வண்டிகளுக்கும், தந்திக் கம்பிகளுக்கும் நித்திய கண்டங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்த காலம். வாழ்க்கைப் பாதையில் பிரவேசித்து மூன்று மாதங்கள்கூட ஆகாத

# புரட்சியும் காதலும்

☆ ☆ ☆ துரோணன் ☆ ☆ ☆

'கிணுகிணு' வென்று டெலிபோன் மணி அடித்தது. 'ரிஸீவ'ரைக் காதில் வைத்துக் கொண்டேன். அடுத்த ஸ்டேஷனிலிருந்து ஐந்து மணி வண்டி கிளப்பி விட்டதை ஸ்டேஷன் மாஸ்டர் அறிவித்தார். கொட்டாவி விட்டுக் கொண்டே அரைத் தூக்கத்திலிருந்த வேலாயுதத்தை எழுப்பிக் கைகாட்டியை இறக்கச் செய்து விட்டு வந்திருந்த ஜனங்களுக்கு இரண்டரை டிக்கட்டைக் கொடுத்தேன். சிறிது நேரத்துக்குள்ளாகவே பூதம்போல் ஓலமிட்டுக்கொண்டு வண்டி வந்துவிட்டது.

"அச்சரபாக்கம், அச்சரபாக்கம்!" என்று உரக்கக் கூவினான் வேலாயுதம். இந்தக் கூப்பாட்டை ஒருவரும் சட்டை செய்யாதது போல் ஒருவருமே இறங்கவில்லை. பச்சை விளக்கை எடுத்துக் காண்பித்து விட்டுத் திரும்பினேன்.

"நமஸ்காரம், ஸார்!" என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினேன். அந்த அரைகுறையான ஒளியில் வந்திருந்தது யாரென்பதே புரியவில்லை. சில்க் சட்டையும் உருமாலையுமாக இந்தக் காட்டுப்புறத்துக்கு யார் வரப்போகிறார்கள் என்றே எனக்குத் தோன்றிற்று. பக்கத்தில் பெட்டி, கூஜா சகிதமாக நின்றுகொண்டிருந்த ஒரு யுவதி, "ஏழு எட்டு வருஷம் ஆயிடுச்சில்லே, ஐயாவுக்கு மறந்துட்டிருக்கும்" என்றாள்.

என் ஞாபக சக்தியைத் திருப்புவதற்குக் கொஞ்சம் சிரமமாகத்தானிருந்தது. அவனோ 'கலகல'வென்று நகைத்தான். இப்பொழுது புரிந்து விட்டது.

"அடேடே, துரையப்பனா? வாப்பா, வா!" என்றேன் மகிழ்ச்சியுடன்.

துரையப்பனும் அவன் சகதர்மிணியும் ஸ்டேஷன் அறைக்குள் நுழைந்தனர். நான் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு எதிரிலிருந்த பெஞ்சுப் பலகையைக் காட்டினேன். எவ்வளவோ கூறியும் அவன் கீழேயே உட்கார்ந்து கொண்டு மகிழ்ச்சி மிகுதியால் உரத்த குரலுடன் என்னைப் பற்றி விசாரிக்கத் தலைப் பட்டான். சாவியும் கையுமாகத் திரும்பி வந்த வேலாயுதம் ஆச்சரியத்துடன் என்னையும் அவர்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்றான்.

"இவர்கள் யார், தெரியுமாடா? அடிக்கடி நான் சொல்வேனே—உனக்கு முன்னாடி இந்த ஸ்டேஷனில் இவன்தான் 'பாயிண்ட்ஸ்மேன்'—உன்னைப் போல் இவன் சோம்பேறியில்லே!" என்றேன் வேலாயுதத்தை நோக்கி. அவன் ஸ்தம்பித்து நின்றான்.

"என்ன வரகவி, சௌக்யந்தானா? வியாபாரமெல்லாம் சௌகரியமாக நடக்குதா? வருஷம் எட்டாச்சுதே, குழந்தை குட்டி ஒண்ணுங் கிடையாதா?" என்றேன் மகிழ்ச்சியுடன். எனது கடைசிக் கேள்வியால் அவனது பெண் தெய்வம் நாணிக் கொண்டே பின் நகர்ந்தாள்.

"ஏதோ ஆண்டவன் கிருபையிலேயும், ஒங்க ஆசீர்வாதத்திலேயும் ஒண்ணும் குறைச்சல் இல்லீங்க. ஆனா, குழந்தை குட்டி சமாசாரந்தான்........." என்று கூறிக்கொண்டே அவளை நோக்கினான் துரையப்பன். மீண்டும் அவனே தொடர்ந்து, "அதுதாங்க, நம்ம 'டோல் கேட்டு' பிள்ளையாரைக் கும்பிட்டுட்டு ஒங்களையும் பார்த்துட்டுப் போகலாம்னு நாங்க கிளம்பினோங்க!" என்றான். அவனைத் தொடர்ந்து அவனது மனைவி சரமாரியாக என்னைப் பற்றி விசாரிக்கத் தலைப்பட்டாள். எனது சிந்தனை சுமார் எட்டு வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவத்தை நோக்கிப் படையெடுத்தது.

* * *

துரையப்பன் அச்சரபாக்கம் ஸ்டேஷனுக்கு 'பாயிண்ட்ஸ்மே'னாக வந்து ஆறு மாதம்தான் ஆகியிருந்தது. சிறிது காலத்திற்குள்ளாகவே அவன் என் இதயத்தையும், என் குடும்பத்தினரின் இதயத்தையும் வெகுவாகக் கவர்ந்து விட்டான். அவனது நாவினின்றும் நாட்டுப் பாடல்கள் எப்பொழுதும் உதிர்ந்துகொண்டே இருக்கும்.

"நீ இந்த உத்தியோகத்துக்கே லாயக் இல்லேயடா, நீ ஒரு வரகவி!" என்பேன். உற்சாக மிகுதியால் பின்னும் அவன் உரக்கப் பாட்டுப் பாடுவான். என் குழந்தைகளெல்லாம் அவனை விட்டே அகலாது.

பின்னும் ஒரு மூன்று மாதம் சென்றிருக்கும். பக்கத்துக் கிராமத்தில் ஏதோ ஒரு திருவிழா நடந்து கொண்டிருந்ததால் அன்று ஸ்டேஷன் கொஞ்சம் கல

நல்ல வரன்கள் வந்தன. ஆனாலும் மேற்கொண்டு விவாகம் செய்து கொள்ள அவன் விரும்பவில்லை.

தாரா வளர்ந்து பேச ஆரம்பித்ததும் தன் தாயாரைப் பற்றி அடிக்கடி கோபாலனை நச்சரிக்க ஆரம்பித்தாள். அப்போதெல்லாம் மறு விவாகம் செய்து கொள்ளலாம் என்று அவன் எண்ணுவதுண்டு. நாள் ஆக ஆகத் தாராவின் பிடுங்கல் அதிகமாகிக் கொண்டு வந்தது. சதா, "அம்மா எப்போ வருவாள்?" என்பதே தாராவின் கேள்வியாக இருந்தது. இந்தப் பிரச்னையை எப்படித் தீர்ப்பதென்று தெரியாமல் கோபாலன் தவித்துக் கொண்டிருந்தான்.

*

தாரா கோபாலனிடம் அடி வாங்கிக் கொண்ட அன்று மறு நாள் காலை. அவன் ஹாலில் உட்கார்ந்து பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்தான். தாரா பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தாள். அப்போது "கோபாலா!" என்ற குரலைக் கேட்டு அவன் தலை நிமிர்ந்து பார்த்தான். அவனுடைய அண்ணா, மன்னி, அண்ணாவின் பெண் பூமா ஆகிய மூவரும் வந்திருந்தனர். தன் கண்களை நம்ப முடியாமல் கோபாலன் ஒரு க்ஷணம் தவித்தான். மறுக்ஷணம் "வாங்கோ, அண்ணா!" என்று உபசாரத்துடன் கூறி வரவேற்றான்.

பூமா, தாராவைப் பார்த்தவுடன் வாரி அணைத்துத் தூக்கிக்கொண்டாள். "அப்பா, இதோ அம்மா வந்துட்டாப்பா!" என்று கூறித் தாரா, பூமாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு கொஞ்ச ஆரம்பித்து விட்டாள்.

கோபாலனின் அண்ணா சர்வசாதாரணமாக அவனிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது சொன்னார்:

"கோபாலா! நீ கல்யாணம் செய்து கொண்டு சுகமாக இருப்பதைக் கேள்விப் பட்டேன். திடீரென்று மனைவி தவறிப் போனது இப்போதுதான் தெரிந்தது. நீ குழந்தையை வைத்துக் கொண்டு ரொம்பவும் கஷ்டப்படுவதாகவும், குழந்தை சதா 'அம்மா, அம்மா!' என்று அழுவதாகவும் கேள்விப் பட்டேன். நீ கோபமாய் இப்படியே இருந்து விட்டாலும், நான் அப்படி இருக்கக் கூடாதல்லவா? அதனால் தான் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்" என்றார். இதைக் கேட்டதும் கோபாலனின் முகத்தில் அசடு வழிந்தது.

அன்று மாலை கோபாலனின் வீட்டிற்கு ரகுநாதன் வந்திருந்தான். அவனைத் தன் அண்ணாவுக்கு அறிமுகப்படுத்தித் தனக்கு அவன் செய்த உதவியைப் பற்றிப் பிரமாதமாக அவரிடம் கூறிக் கொண்டிருந்தான்.

எல்லோரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கையில் பூமாவை ரகுநாதன் அடிக்கடி பார்ப்பதும், பூமா ரகுவை நோக்குவதையும் மெல்லக் கவனித்த கோபாலனுக்குச் சரேலென்று ஓர் அபூர்வ யோசனை தோன்றியது.

உடனே அண்ணாவைப் பார்த்துக் கோபாலன், "அண்ணா, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. ரகுவுக்கு நம் பூமாவைக் கல்யாணம் செய்து விட்டால் என்ன? தாராவும் பூமாவைக் கண்டது முதல் 'அம்மா!' என்று சதா சுற்றுகிறாள். தாராவின் குறையும் தீர்ந்துவிடும்" என்றான்.

கோபாலனின் வார்த்தையை அவன் அண்ணா மறுக்கவில்லை. "பேஷாய்ச் செய்! உனக்கு இல்லாத உரிமையா?" என்றார்.

ரகுநாதனும் பூமாவும் வெட்கத்தால் தலை குனிந்தனர்.

நெடுநாட்களாகக் காத்திருந்த தாராவுக்கு சீக்கிரமாக ஒரு அம்மா வந்துவிடவே அவளுக்குத் தலை கால் தெரியவில்லை!

## இவ்வளவுதானா!



‘ஸ்கூல்—பைனல்’ வரையிலும் சொந்த ஊரான பூவட்டத்திலேயே வாசித்து விட்டான். பிறகு மேல் படிப்பிற்காகச் சென்னைக்கு வந்து வாசித்துக் கொண்டிருந்தான். இதற்கிடையில் ஊரிலிருந்த அவன் அண்ணாவுக்குக் குடும்ப பாரம் அதிகமாகவே, அவரால் கோபாலனைச் சரிவரக் கவனிக்க முடியாமற் போய்விட்டது. இதனால் மனைவியின் வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அண்ணா தன்னைக் கவனக் குறைவாக விட்டு விட்டார் என்ற எண்ணம் கோபாலனின் உள்ளத்தில் குடி கொண்டு விட்டது. காலேஜில் வாசித்துக் கொண்டிருக்கையில் விடுமுறை நாட்களை ஊரில் கழிக்கக்கூடக் கோபாலன் அதிகமாக ஊருக்குச் செல்வதில்லை. எப்படியாவது பி. ஏ. வகுப்பை முடித்துக் கொண்டு, சென்னையிலேயே ஒரு வேலையைப் பார்த்துக் கொண்டு, அண்ணா தற்போது அனுப்பும் பணத்தைக்கூட அனுப்ப வேண்டாமென்று சொல்லிவிட வேண்டுமென்று அவன் நிர்மானித்திருந்தான். சென்னையிலேயே தான் சம்பாதிக்கும் பணத்தை வைத்துக் கொண்டு, பிறத்தியார் கையை எதிர்நோக்காமல் காலம் கழிப்பது என்றும் அவன் முடிவு செய்திருந்தான்.

கோபாலன் காலேஜில் வாசித்துக் கொண்டிருக்கையில் ஹாஸ்டலில் தங்கியிருந்தான். அவன் வகுப்பில் வாசிக்கும் ரகுநாதன் அவனுடைய அந்தரங்க நண்பனாக இருந்து வந்தான். அவனிடம் கோபாலன் தன்னுடைய மேடு, பள்ளம் அமைந்த வாழ்க்கை வரலாறு, அந்தரங்கமெல்லாம் சொல்வது வழக்கம். ரகுநாதனும் அடிக்கடி ஹாஸ்டலுக்கு வந்து கோபாலனின் அறையில் தங்கி அவனுடன் பேசுவான்; படிப்பான். சில சமயங்களில் கோபாலனை அவன் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போய் விருந்து வைப்பது வழக்கம். ரகுநாதனின் தகப்பனார் ஒரு ரிடையர்டு ஜட்ஜ். ரகுவினுடைய சகோதரிதான் சகுந்தலை. கோபாலன் ரகுவின் வீட்டிற்கு அடிக்கடி வந்து போனதால் மிகவும் சகஜமாகச் சகுந்தலையுடன் பேசிப் பழகி வந்தான். சகுந்தலைக்கும் அவனை ரொம்பப் பிடித்திருந்தது; கோபாலனுக்கும் சகுந்தலையை விசேஷமாகப் பிடித்திருந்தது. அடிக்கடி கோபாலனை வீட்டிற்கு அழைத்து வரும்படி சகுந்தலை, ரகுநாதனிடம் கூறுவது வழக்கம். சகுந்தலைக்கும் அவனுக்குமிடையில் தோன்றிய அன்பு நாளா வட்டத்தில் காதல் மலராக மலருமென்று ரகுநாதனோ, அவன் பெற்றோர்களோ கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

கோபாலன் பி. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினான். தன் அண்ணாவினிடம் கசப்பு ஏற்பட்டிருந்ததினால் ஏற்கெனவே சென்னையில் தங்கிவிடுவதென்ற ஏற்பாட்டின்படி ரகுநாதன் வீட்டிலேயே அவன் தங்கிவிட்டான்.

சகுந்தலை, கோபாலனை ரொம்பவும் விரும்பியதினால் அவனுக்கே அவளை மணம் முடிப்பதென்று நிர்மாணமாயிற்று. சகுந்தலைக்கும், கோபாலனுக்கும் மிகவும் சிறப்பாக விவாகம் நடைபெற்றது.

அவன் மாமனார் ரிடையர்டு ஜட்ஜ் ஆகையால் அவருடைய சிபாரிசின் பேரில் அவனுக்கு நல்ல சம்பளத்தில் ஒரு சர்க்கார் உத்தியோகம் கிடைத்தது. மனமொத்த தம்பதிகளிருவரும் மலரும் மணமும் போல் வாழ்க்கை நடத்தி வந்தார்கள். இந்த விவாக விஷயத்தைப் பற்றிக் கோபாலன் தன் அண்ணாவுக்குத் தெரிவிக்கவே யில்லை. கோபாலன், சகுந்தலை நடத்திய இன்ப வாழ்க்கையின் அறிகுறிபோல் தாரா பிறந்தாள். தாராவுக்கு ஒன்றரை வயது இருக்கும்போது சகுந்தலை ‘டைபாயிட்’ ஜுரத்தினால் மிகவும் அவஸ்தைப் பட்டாள். கடைசியில் ஜுரம் முற்றி, கோபாலனையும் தாராவையும் தவிக்க விட்டு விட்டுச் சென்றுவிட்டாள்.

சகுந்தலையின் மறைவுக்குப் பிறகு இளம் வயதான கோபாலனுக்கு இரண்டு, மூன்று



# தாராவின் தாயார்

சாம்ராஜ்

இரவு வேளையாகையால் கோபாலனின் அழகிய பங்களா, மின்சார விளக்குகளின் பிரகாசத்தில் ஜகஜ்ஜோதியாக விளங்கியது. அந்த விளக்குகளின் வெளிச்சத்துடன் போட்டி இடுவதுபோல் பூரண சந்திரனின் மோகன நிலவொளி பட்டப் பகல்போல் வெளியில் காய்ந்து கொண்டிருந்தது. பங்களாவின் ஹாலுக்கு மத்தியிலுள்ள மேஜையின் முன்னால் உட்கார்ந்து கோபாலன் ஏதோ ஆபீஸ் கணக்குகளைச் சரி பார்த்துக் கொண்டிருந்தான். எட்டு வயதுகூட நிரம்பாத கோபாலனின் அருமை மகள் தாரா, "அப்பா, அப்பா!" என்று அழைத்த வண்ணம் ஹாலுக்கு வந்து கொண்டிருந்தாள்.

தாரா மூக்கும் விழியுமாகப் பார்ப்பதற்கு மிகவும் லக்ஷணமாகக் காணப்பட்டாள். தலை நன்றாக வாரி விடப்பட்டு இரட்டைப் பின்னல் போடப்பட்டிருந்தது. பச்சை வர்ண ஸில்க் கவுன் அணிந்து அவள் மிகவும் ரம்மியமாகக் காட்சியளித்தாள்.

"அப்பா! அம்மா வருவான்னு சொன்னையே, எப்போ அப்பா வருவா?" என்று வினவினாள் தாரா.

அதற்குக் கோபாலன், "அம்மா வருவா! நீ சாப்பிட்டயோ இல்லையோ, போய்ச் சமர்த்தாகப் படுத்துக்கோ. காலையிலே அம்மா வருவா!" என்றான்.

இம்மாதிரியாகத் தாரா, "அம்மா எப்போ வருவாள்?" என்று கேட்கும் போதெல்லாம் காலையில் வருவாள், மாலையில் வருவாள் என்று பல முறை சொல்லி ஏமாற்றியாகி விட்டது. இந்த ஏமாற்றமான பதிலைப் பல முறை கேட்டுக் கேட்டு அலுத்துப் போயிருந்த தாரா, "பக்கத்து வீட்டுக் கோபுவை அவன் அம்மா சாயந்திரம் பீச்சுக்கு அழைச்சிண்டு போனா. என்னை நம்ப அம்மா எப்போ அப்பா வந்து பீச்சுக்கு அழைச்சிண்டு போவா?" என்றாள்.

குழந்தையின் ஏக்கம் நிறைந்த வார்த்தைகளைக் கேட்டதும் கோபாலன் ஒரு நிமிஷம் கல்லாய்ச் சமைந்து போய்விட்டான். "தாரா, போய்ப் படுத்துக்கோ. காலையிலே ஊரிலே இருந்து அழைச்சிண்டு வரேன்" என்றான் அவன். என்னதான் சொன்னாலும் அவள் விடுவதாக இல்லை. குழந்தைகளின் பிடி விடாப்பிடிதானே?

"அப்பா! அம்மாவை இப்பவே அழைச்சிண்டு வாப்பா!" என்று சண்டித்தனம் பிடித்து அழ ஆரம்பித்துவிட்டாள். கோபமடைந்த கோபாலன் அவள் முதுகில் 'பளீர்' என்று ஒரு அடி கொடுத்து, "போ, போய்ப் படுத்துத் தூங்கு!" என்று கர்ஜனை செய்தான். பாவம், தாரா அழுது கொண்டே படுக்கை அறைக்குச் சென்றாள்.

விக்கலும் விம்மலும் மெல்லக் கேட்டுக் கொண்டே இருந்தது. கோபாலன் திரும்பவும் கணக்கைச் சரி பார்ப்பதில் மூழ்கினான். கொஞ்சம் கொஞ்சமாக விம்மல் சத்தம் குறைந்து மௌனம் குடிகொண்டது.

ஆபீஸ் வேலை யாவும் பூர்த்தியானதும் அவன் நாற்காலியில் சாவதானமாகச் சாய்ந்து கொண்டான். அடுத்தாற்போல் தாராவின் ஞாபகம் வரவே, தான் மிருகத்தனமாகக் கோபம் கொண்டு குழந்தையை அடித்ததைக் குறித்து மிகவும் வருந்தினான். மறுகணம் ஹாலை விட்டு எழுந்து படுக்கை அறையை நோக்கிச் சென்றான். அங்கு தாரா பஞ்சணை மெத்தையின் மேல் பட்டுப் பூச்சியைப்போல் படுத்திருந்தாள். அவள் கன்னங்கள் கண்ணீரில் நனைந்திருந்தன. கோபாலன் அவளுடைய ரோஜாக் கன்னத்தை மெல்லத் தடவினான்.

அவள் இரண்டு கைகளிலும் இரண்டு மரப்பாச்சிப் பொம்மைகள் இருந்தன. அதைக் கண்ணுற்ற கோபாலனின் வாய் அவனையும் அறியாது, "அம்மாவுக்குப் பதில் உனக்குத் திருப்தியளிப்பது இந்த மரப்பாச்சிப் பொம்மைகள்தானா!" என்று முணுமுணுத்தது. குழந்தையைச் சரியாகப் படுக்க வைத்து விட்டு மிகுந்த மன வேதனையுடன் படுக்கை அறையை விட்டு வெளியே வந்தான்.

★

கோபாலன் சிறு வயதிலேயே பெற்றோர்களை இழந்து முதல் நம்பர் துரதிர்ஷ்டசாலியாக விளங்கினான். உடன் பிறந்த சகோதரனின் ஆதரவில் வளர்ந்து

தொட்டாலே போதும் என்ற நினைவில் என்னை ஒரு பெண் மானாக்கிக் கொண்டு உங்களிடமே வந்து விட்டேன். சூதறியாத நீங்கள் அந்தப் பெண் மானை ஆசையுடன் வளர்த்தீர்கள்; அன்புடன் ஆதரித்தீர்கள். தங்கள் கையிலிருந்தே புல்லைத் தின்னும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. மட்டற்ற மகிழ்ச்சியுடன் உங்கள் அரவணைப்பில் நான் துயின்றேன். அண்டி வந்த ஒரு பெண்ணுக்குக் கொடுக்க மறுத்த அன்பை ஒரு மானுக்குக் கொடுத்தீர்கள். அதையும் ஒரு பெண்தான் ஏற்றுக் கொண்டாள் என்பதை நீங்கள் அறியவில்லை!

"உங்கள் அன்பு வளர்ந்து பாசமாகி விட்டது. என்னை விட்டுப் பிரியாத நிலை ஏற்பட்டது. அழகான அந்த மான் உங்களுடைய உற்ற துணையாகி விட்டது. எங்கு சென்றாலும் நீங்கள் மானுடன் சென்றீர்கள்.

"ஒருநாள் உங்கள் குருநாதரைப் பார்க்கப் புறப்பட்டீர்கள். என்னையும் உடன் அழைத்துச் செல்வீர்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் எனக்குப் பயம் ஏற்பட்டது. உங்கள் குருநாதர் மகா ஞானி. முக்காலமும் அறிந்தவர். என்னைக் கண்டு கொள்வார் என்று எனக்குத் தெரியும். மான்தானே என்ற நினைவில் நீங்கள் அழைத்துச் சென்றாலும் அவர் என்ன நினைப்பார்? இந்த நிலையில் நான் தயங்கி நின்றேன். அப்பாவி மனிதரான நீங்கள் என்னைத் தூக்கித் தோளில் போட்டபடி ஆற்றைக் கடந்து குருநாதர் ஆசிரமத்திற்கு வந்து விட்டீர்கள். எனக்கு உடலெல்லாம் நடுங்கியது. நான் பயந்தபடி உங்கள் குருநாதர் என்னைக் கண்டு கொண்டார். 'என் முன்னிலையில் ஒரு பெண்ணைத் தோளில் போட்டுக் கொண்டு வர உனக்கு எத்தனை தைரியமடா?' என்று கூவினார். உங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. 'சுவாமி, மானையல்லவா கொண்டு வந்திருக்கிறேன்? பெண் இல்லையே!' என்றீர்கள். அவருக்கோ கோபம் அதிகமாகி விட்டது. 'என்னைக் கூடவா ஏமாற்றப் பார்க்கிறாய்? இதோ பார், உன் மானை!' என்று கூவி, என்னைச் சுய உருவுக்குக் கொண்டு வந்தார். என்னைக் கண்டதும் உங்கள் நினைவை நீங்கள் அடியோடு இழந்து விட்டீர்கள்.

"குருநாதர் கோபத்தில் சாபம் கொடுத்தார். 'பெண்ணே, நீ அடுத்த ஜன்மத்தில் சித்திரப் பாவையாய் உயிரில்லாமல் அவன் பக்கத்திலேயே இருந்து ஏக்கத்தால் வாடுவாய். அவன் உன்னை நினைத்து நினைத்து உருகிப் பிரம்மசாரியாகவே வாழ்க்கையைக் கடத்துவான்' என்று கர்ஜித்தார்.

"சுவாமி, அதன் பயனாகத்தான் நான் ஜீவனற்ற சித்திரமாகச் சுவரில் நிற்கிறேன். நீங்களும் இந்தச் சாய்வு நாற்காலியில் தனிமையில் உட்கார்ந்திருக்கிறீர்கள்!"

இதைக் கூறி முடிக்கவும் அவள் கலகலவென்று ஒருதரம் சிரித்தாள்.

தலை நிமிர்ந்து நான் பார்த்தபோது அவள் அங்கு இல்லை. என் பக்கத்தில் அந்தப் படம் காற்றில் அசைந்து ஆடியது. அந்தத் தேவகன்னியின் வாயில் ஒரு புன்சிரிப்பு. நான் மயக்கத்திலிருப்பவன் போல இருந்தேன். சித்திரப் பாவையாய் நிற்கும் அவள் யார்? நான் யார்? இருவருக்கும் என்ன தொடர்பு?

இந்தப் புரியாத புதிருக்கு விடை காண நான் முயன்றபோது மீண்டும் பெண் குரல் கேட்டது.

"இவன் நினைக்கிறாப்போலப் பெண் கிடைக்கிறது நடக்காத காரியம். இப்படியே பிரம்மசாரியாகத்தான் இருப்பான் போல இருக்கு!"—அம்மாவின் தீர்க்க தரிசனம் இது.

கலகலவென்ற சிரிப்பொலி என் தங்கையிடமிருந்து வந்தது. அதைத் தொடர்ந்து "எங்கேயிருந்தாவது ஒரு தேவகன்னி திடீரென்று குதிக்க வந்தாலும் வரலாம். யார் கண்டா?" என்றாள் அவள்.

எனக்கு நெஞ்சு படபடத்தது. தேவ கன்னி ஒரு சமயம் என்னை நாடி வந்தாலும் வரலாம். ஏன் வரக் கூடாது?



"ஏன் ஸார்! இப்போது கோடை காலமா? இல்லை, குளிர் காலமா?"

"எனக்கும் சந்தேகமாகத்தான் இருக்கிறது. 'உங்கள் கால பலனி'லே பாருங்கள், தெரியும்!"




விழிப்பும் உறக்கமு மில்லாத நடுநிலையில் சாய்வு நாற்காலியில் படுத்திருந்தேன். அறைக்கு வெளியே என் தங்கையும் அம்மாவும் பேசிக்கொண்டிருந்தது மெதுவாகக் காதில் விழுந்தது. பேச்சு என்னைப் பற்றியதா யிருக்கவே சற்றுக் கவனித்தேன்.

"இந்த வாரம் அண்ணாவின் கதையைப் படிச்சயா, அம்மா? வரவரக் காதல் கதை கூட எழுத ஆரம்பிச்சுட்டான்......!"

இது என் தங்கையின் குரல்.

"ஆமாம், ஆயிரம் அழகிகளைப் பத்தித்தான் எழுதிக் குவிக்கிறான். இவனுக்கு எந்த அழகி காத்திருக்கிறாளோ, தெரியவில்லை!"—இது என் அம்மாவின் ஏக்கம் கலந்த பெருமூச்சுடன் வெளிவந்தது. தன் பிள்ளைக்கு ஒரு கல்யாணம் செய்து வைத்துப் பார்த்துவிட அவளுக்கு என்னமோ ரொம்ப ஆசைதான். குழந்தை அத்தனை பெரிய பொறுப்பை ஏற்றுக் கொள்ளத் தயங்கியது. இதுதான் விஷயம்.

மறுபடியும் என் தங்கையின் குரல் கணீரென்று கேட்டது.

"அவனுக்கு எதற்கம்மா கல்யாணம்? கொஞ்சம் போய் அவனைப் பாரேன்! மடியில் ஒரு அழகி; பின்னால் ஒரு மோகினி; எதிரில் ஒரு அழகு ராணி; பக்கத்தில் ஒரு தேவ கன்னி. இத்தனை பேர் காத்திருக்க அவனுக்கு என்ன குறைச்சல்?"

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. கண்ணை நன்றாக விழித்து என்னைச் சுற்றியும் ஒரு முறை பார்த்துக் கொண்டேன். உண்மைதான்; என் மடியில் கிடந்த அமெரிக்கப் பத்திரிகையின் அட்டைப் படத்தில் ஒரு அழகி பல்லைக் காட்டிக்கொண்டிருந்தாள். எதிரில் மேஜையின்மேல் ஒரு அழகியின் பளிங்குக் கல் உருவம் காத்து நின்றது. பின்னால் ஒரு மோகினியின் படம். பக்கத்திலிருந்தது நானே என் கையால் வரைந்த ஒரு தேவ கன்னியின் சித்திரம்.

இவர்களைப் பார்த்து ஒரு முறை சிரித்துக் கொண்டேன். பேசாத இந்த அழகிகள் பேச்சுக்கல்லியான என் தங்கையை விட ஆயிரம் பங்கு தேவலாம். சில சமயங்களில் அழகான பெண்கள் பேசாமலிருப்பதே மேலாகத் தோன்றுகிறது; இல்லையா?

என் தங்கையின் அபாரமான ரசிகத் தன்மையைப் புரிந்து கொள்ள அம்மாவால் முடியவில்லை. அவளுக்கு ஆத்திரம் தான் வந்தது.

"என்னடி, உளர்றே? அவன் அறைக்குள்ளே என்னை யறியாமல் எவளடி வந்துட்டா, அப்படி!" என்று சீறிவிழுந்தாள்.

கலகலவென்ற என் தங்கையின் விஷமச் சிரிப்பிலே மறுபடியும் நான் கண் அயர்ந்தேன்.

மெல்ல என் தோளைத் தொட்டு யாரோ எழுப்புவது போலத் தோன்றியது. அழகான கைகள். மலர்க்கரங்கள் என்றால் அவைகளைத்தான் சொல்ல முடியும். உடலிலே பட்டதும் மாயக் கோல்போல என்னவெல்லாமோ செய்துவிடும். திரும்பிப் பார்த்தேன். என் கண்களை என்னால் நம்ப முடியவில்லை. அந்தப் பெண் அழகி

என் கால்களின் அருகில் வந்து மண்டியிட்டு உட்கார்ந்தாள். என் மடியிலே தலை வைத்து அன்புடன் என்னைப் பார்த்துக் கேட்டாள்: "என்னைத் தெரியவில்லையா, உங்களுக்கு?"

இது விசித்திரமான கேள்விதான். அவளை நான் இதற்கு முன் பார்த்ததில்லை. ஆனால் எனக்கு அவளை நன்றாகத் தெரியும். இரவும் பகலுமாக நான் கனவில் கண்டு வரும் அந்த லட்சியப் பெண் இவள்தான்!

அவளை நான் மறக்கவே முடியாது. ஆனாலும் அவள் யார்? இது எனக்குத் தெரியாது. என் கற்பனையிலே உருவாகி என் கைகளிலே நடமாடி உயிர் பெற்று விட்டவள் அவள். நான் எழுதியிருந்த தேவகன்னி அவள்தான். ஆனால் அவளை எனக்குத் தெரியாதே! பலகாலம், யுகம் யுகமாகப் பழகி விட்டவள் போல இருந்தாலும் அவள் யாரோ, நான் யாரோ என்ற எண்ணம்தான் குறுக்கிட்டது. உரிமையுடன் என்னைத் தேடிவந்திருக்கும் அவள் யார்?

நான் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். நான் பேசாதது கண்டு அவளே ஆரம்பித்தாள்:

"சுவாமி, சென்ற ஜன்மத்தைப் பற்றி உங்களுக்கு எப்போதாவது கவலை ஏற்பட்டதுண்டா?"

இந்தக் கேள்வியை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. இந்த ஜன்மத்தில்—அதுவும் நேற்று முன் தினம் நடந்ததைப் பற்றிக்கூட நான் கவலைப் படுவதில்லை. போன ஜன்மத்தைப் பற்றி எனக்கென்ன தெரியப் போகிறது!

நான் என் அறியாமையை மௌனத் திரையில் மூடி வைக்கப் பார்த்தேன். அவள் புரிந்து கொண்டவள் போல் சிரித்தாள்.

"சுவாமி, நான் போன ஜன்மத்தில் உங்கள் காதலுக்காக ஏங்கிக் கிடந்தேன். ஆனால் அது இந்த அபாக்கியவதிக்குக் கிட்டவில்லை. உங்கள் பாதத்தில் என் அழகை அர்ப்பணித்து அன்புப் பிச்சை கேட்டேன். ஆனாலும் அது கிடைக்கவில்லை."



எனக்குச் சிரிப்பு வந்தது. "சரிதான், அந்தப் பாவம்தான் என்னைப் பின் தொடருகிறுப் போல இருக்கிறது. இந்த ஜன்மத்தில் நான் உன் படத்தை எழுதி வைத்துக்கொண்டு தவம் கிடக்கிறேன். இரவும் பகலுமாகக் கனவு காண்கிறேன். ஆனால் இன்னும் பிரம்மசாரியாகவேதானிருக்கிறேன். நீ கிடைக்கவில்லை!"

அவள் என்னைப் பார்த்தாள். முகத்தில் கொஞ்சம் கோபத்தின் சாயை தோன்றி மறைந்தது.

"சுவாமி, உங்களுக்கு விளையாட்டாகத் தோன்றலாம். எனக்கு அப்படியில்லை; நான் தேவகன்னிதான். இருந்தாலும் உங்களிடம் நான் அடிமையாகிக் கிடந்தேன். உங்கள் அழகும் இளமையும் என்னை ஆட்கொண்டு விட்டிருந்தன. கேளுங்கள், நான் அப்போது எத்தனை ஆசையுடன் உங்களைத் தேடி வந்தேன் என்றால் அந்தத் துடிப்பை இப்போது கூட என் இதயம் சொல்லும். இதயத் துடிப்பை அனுபவித்த என் முத்துமாலை சொல்லும்.

"கானகத்துத் தனிமையிலே அழகான அந்த நதிக்கரையில் அமைந்திருந்த உங்கள் ஆசிரமம் இப்போதும் என் நினைவில் நிற்கிறது. பிரம்மச்சரிய விரதம் பூண்டு தனித்திருந்த உங்களிடம் நான் வந்து மன்றாடினேன். நீங்கள் உதறித் தள்ளி விட்டீர்கள். பெண்கள் மாயப் பிசாசுகள் என்று சொல்லி விட்டீர்கள்.

"இருந்தும் என் கடைசிக் கோரிக்கையை வெளியிட்டேன். பணிப் பெண்ணாக இருந்து உங்களுக்கு உதவி செய்யும் பாக்கியமாவது எனக்குக் கொடுங்கள் என்று கேட்டேன். சுவாமி, பெண்ணின் அன்பு பரிசுத்தமானது. பணிவிடை செய்வதிலேகூட அவள் அன்பையெல்லாம் கொட்டி விடுவாள். ஆனால் நீங்கள் அதற்குக்கூடச் சம்மதிக்கவில்லை. பெண் வாடையே ஆசிரமத்தில் கூடாது என்று வாதாடினீர்கள் ..."

நான் சிரித்துக்கொண்டே, கேட்டேன்: "அப்போது நான் அத்தனை ரசிகனாயிருந்திருக்க மாட்டேன். இப்போது நான் நல்ல ரசிகன். நிராகரித்த இந்தக் கைகளே இப்போது அழைக்கின்றன. நீ என்னுடன் இருந்து விடலாமே!"

"ஆண்களே இப்படித்தான்! வலிய வந்தால் விரட்டியடிப்பதும். விலகி நின்றால் கெஞ்சி நிற்பதும் அவர்கள் பிறவிக்குணம். சுவாமி, நீங்கள் அப்போது என்னைத் துறந்தாலும் என்னால் உங்களைத் துறக்க முடியவில்லை. இரவும் பகலுமாக ஏங்கிக் கிடந்து, கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தேன். உங்கள் கையால் என்னைத்


"நான் தாடி வளர்க்கிறேன் என்று பரிகாசம் செய்தீர்களாமே? அறிவாளிகளெல்லாம் தாடி வளர்க்கிறார்கள்!"
"அது சரிதான் ஐய்! ஆனால் நீர் எதற்காகத் தாடி வளர்க்கிறீர்?"
"புடவைக்கு என்னப்பா இத்தனை விலை? கொள்ளை விலையா இருக்கிறதே....; காலம் இருக்கிற இருப்பிலே....!"
"ஆமாம் ஸார்! இது கொள்ளைக்காலம் புடவை ஆச்சே ஸார்!"
"என்ன பிரதர், வெறுமேசு விழிக்கிறாய்?"
"ஒன்றும் இல்லே அப்பா! காலம் இருக்கிற இருப்பிலே கடைசிவரையில் பத்திரமாகப் போய்ச் சேரவேணுமே என்கிற கவலைதான்!"
ஆபீஸில்...
வீட்டில்.
பாபு



# அதிக அழகு, அதிக கவர்ச்சி...

## ...பாண்ட்ஸ் இரு க்ரீம்களின் சகாயத்தால்

உங்கள் வதனம் புதுமலர் காந்தியுடன் விளங்க, இருவகை சௌந்தரிய பராமரிப்பு உங்களுக்கு தேவை, இரவும் காலையிலும். இரவு உபயோகத்திற்கு; அரிய தைலங்களடங்கிய பாண்டஸ் கோல்ட் க்ரீம், முகத்தை சுத்தம் செய்து மழமழப்பாக்க. காலைவேளைக்கு, மெல்லிய மெழுக்கற்ற பாண்டஸ் வானிஷிங் க்ரீம், மேனியைக் கருக்கும் சூரிய கிரணங்களிலிருந்து முகத்தைக் காப்பாற்ற.




# பாண்ட்ஸ்

வியாபார விவரங்களுக்கு: L. D. ஸெய்மர் & கோ., (இந்தியா) லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — சென்னை — நோவா கோவா

இருட்டி விட்டது. அந்த இருட்டில் அவர்கள் ஒரு மூங்கிற் பாலத்தைக் கடக்க வேண்டியிருந்தது. விடாக்கண்டன் முன்னால் நடந்தான்; கொடாக்கண்டன் அவனுக்குப் பின்னால் நடந்தான். பாலத்தைக் கடக்கப் போகும் சமயம்—'மளமள'வென்று மூங்கில் முறியும் சத்தம் கேட்டது. விடாக்கண்டன் பயந்து போய் ஒரே தாவாகத் தாவி அடுத்த கரையை அடைந்தான். அதே சமயத்தில், "ஐயையோ!" என்று அலறிக்கொண்டே ஆற்றில் விழுந்தான் கொடாக்கண்டன். அடுத்தகணம், "நண்பா! என்னைக் கரையேற்று! என்னைக் கரையேற்று!" என்று அவன் ஈனக் குரலில் கதறினான்.

"என் அருமை நண்பா! வேறு யாராவது விழுந்திருந்தால் அவர்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று நான் அவர்களைக் காப்பாற்றியிருப்பேன். ஆனால் உன்னைக் காப்பாற்ற எனக்கு விருப்பமில்லை. என்ன இருந்தாலும் நீ என்னுடைய நண்பனல்லவா? உன்னுடைய கால்களைக் கொண்டே நீ நிற்கப் பழக வேண்டுமென்பது என் விருப்பம். ஆகவே, நீந்து! நீந்து! நீயே நீந்திக் கரையேறு!" என்றான் விடாக்கண்டன்.

"ஐயோ! எனக்கு நீந்தத் தெரியாதே!" என்றான் கொடாக்கண்டன்.

"அப்படியானால், நீந்தத் தெரிந்து கொள்ள வேண்டியதன் அவசியத்தை நீ உணர வேண்டாமா? அதற்கு என்னாலான உதவியை இதோ செய்கிறேன்!" என்று சொல்லிவிட்டு, விடாக்கண்டன் இருளில் மறைந்தான்.

அவன் செய்த உதவியைக் கொடாக்கண்டன் என்றைக்கும் மறக்கவில்லை. தட்டுத்தடுமாறிக் கரையேறி உயிர் தப்பினான். சீக்கிரத்திலேயே நீந்தவும் கற்றுக் கொண்டான். சில காலத்துக்குப் பிறகு நீச்சல் பந்தயங்களிலும் ஜெயிக்கத் தொடங்கினான். இதையறிந்த விடாக்கண்டன் பிறருடைய உதவியை எதிர்பாராமல் தன் வாழ்க்கையை நடத்தத் தெரிந்து கொண்டான். —விந்தன்.

---

# • • பம்பாய்த் தமிழ்ச் சங்கம் • •

நீண்ட காலமாக 'ஒண்டுக் குடித்தன'க் கஷ்டங்களைச் சமாளித்துக் கொண்டு தொண்டாற்றி வரும் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார் சொந்தக் கட்டிடம் சம்பாதிக்கும் முயற்சியில் இறங்கியதில் ஆச்சரியமில்லை. பரோபகாரச் சிந்தையுடன் தங்கள் கலைத் திறனைப் பல பொது ஸ்தாபனங்களுக்குப் பயன்படுத்தி வரும் கலைவாணர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனும், ஸ்ரீமதி மதுரமும் அந்தக் கட்டிட நிதிக்கு உதவி நிகழ்ச்சிகள் நடத்திக் கொடுக்க முன் வந்ததிலும் அதிசயமில்லை. சென்ற மே மாதம் 13-ந் தேதியன்று,

"சென்னையினின்று க்ஷேமம் விசாரிக்க வந்தோமய்யா!"

என்ற உபய குசலோபரிப் பாட்டுடன் ஆரம்பமான 'காந்தி மகான்' வில்லுப் பாட்டு கடைசி வரை சுவாரஸ்யமாகவே சென்று முடிந்தது. இந்த நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த கனம் தின்கர்ராவ் தேசாய், "பாஷை புரியாவிட்டாலும் தலைவர் ஸ்ரீநிவாஸன் உதவியினால் கதையை நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தது. தென்னிந்தியர்கள் கெட்டிக்காரர்கள்; எதை எதையோ பக்க வாத்தியமாகக் கொண்டு அவர்கள் ஜனங்களை ஆகர்ஷித்து விடுகிறார்கள்!" என்று கூறி, ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனின் கோஷ்டியாரைப் பாராட்டினார். இடைவேளைக்குப் பின்னர் 'கிந்தனார்' காலக்ஷேபம் ஆரம்பமாயிற்று. கலைவாணரின் ஹாஸ்ய மூட்டையோடு புளி மூட்டையின் பின்பாட்டும் சேர்ந்து கொண்டால் கேட்க வேண்டுமா?—ஒரே சிரிப்பும் கொம்மாளியுந்தான்!

எல்லாவற்றையும் தூக்கியடித்து விட்டது, மறுநாள் 14-ந் தேதியன்று மாதுங்கா கால்ஸா காலேஜ் மைதான அரங்கில் கலைவாணர் கோஷ்டியார் நடத்திய 'இழந்த காதல்' நாடகம். அன்றைய நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த 'ப்ரீ பிரஸ்' ஆசிரியர் ஸ்ரீ ஸதானந்த் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் முயற்சியையும், கலைவாணரது கலைத் திறனையும் வாயாரப் புகழ்ந்தார். ஸ்ரீ கிருஷ்ணன்—மதுரம் தம்பதிகளுக்குச் சங்கத்தின் சார்பில் வாழ்த்துப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. அதைப் பெற்றுக் கொண்டு தமக்கே உரிய ஹாஸ்ய பாணியில் கலைவாணர் கிருஷ்ணன் நன்றி கூறினார். — கபஸ்ரீ.

## குட்டிக் கதை 1

# உபதேசம்

ஓர் ஊரில் இரண்டு நண்பர்கள் இருந்தார்கள். ஒருவன் பெயர் கொடாக்கண்டன்; இன்னொருவன் பெயர் விடாக்கண்டன்.

ஒரு நாள் மழை 'சோ'வென்று பெய்து கொண்டிருந்தது. விடாக்கண்டன் கொடாக்கண்டனை நோக்கி, "கடைத் தெரு வரை அவசரமாகப் போக வேண்டியிருக்கிறது; உன்னுடைய குடையைக் கொஞ்சம் தருகிறாயா?" என்று கேட்டான்.

"நண்பா! வேறு யாராவது இப்படிக் கேட்டிருந்தால் அவர்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று நான் குடையைக் கொடுத்திருப்பேன். ஆனால் உனக்குக் கொடுக்க எனக்கு விருப்பமில்லை. ஏனெனில், உன்னுடைய கால்களைக் கொண்டே நீ நிற்கப் பழக வேண்டுமென்பது என் விருப்பம். என்ன இருந்தாலும் நீ என் ஆருயிர் நண்பனல்லவா?—இன்று நான் உனக்குக் குடை கொடுப்பதாக வைத்துக் கொள். இரவல் குடையிலேயே காலந் தள்ளி விடலாம் என்ற தவறான எண்ணத்துக்கு நீ ஆளாகி விடுவாய்! அதனால் உன்னுடைய கால்களின் மீதே உனக்கு நம்பிக்கை இல்லாமற் போய்விடும். அந்த நிலைக்கு உன்னைக் கொண்டு வரவா நான் உனக்கு நண்பனானேன்?—இல்லை; இல்லவே இல்லை. இன்று நீ மழையில் நனைந்தே போ! அப்போதுதான் உனக்கென்று ஒரு குடை உனக்குச் சொந்தமாயிருக்க வேண்டியதன் அவசியத்தை நீ உணர்வாய்!" என்றான் கொடாக்கண்டன்.



விடாக்கண்டன் போய்விட்டான்.

இன்னொரு நாள் அவர்கள் இருவரும் அந்த ஊர் தபாலாபீசில் சந்தித்தார்கள். "ஒரு நிமிஷம் உன்னுடைய பேனாவைக் கொடு; மேல் விலாசம் எழுதிவிட்டுத் தருகிறேன்" என்றான் விடாக்கண்டன்.

"முடியாது; முடியவே முடியாது. இன்றைக்குக் கொடுத்தால் நீ நாளைக்கும் கேட்பாய்; நாளை மறுநாளும் கேட்பாய்! — இப்படியே உன் வாழ்நாள் முழுவதும் கேட்டுக் கொண்டே இருப்பாய்......!" என்று வழக்கம்போல் தன் உபதேசத்தை ஆரம்பித்தான் கொடாக்கண்டன்.

"இல்லை, நண்பா! இந்தத் தடவை மட்டும் கொடு; இனிமேல் உன்னைக் கேட்கவில்லை......"

"என்னைக் கேட்காவிட்டால் இன்னொருவனைக் கேட்கப் போகிறாய்!—ஐயோ! எடுத்ததற்கெல்லாம் நீ பிறரிடம் பல்லைக் காட்டிக் கெஞ்ச வேண்டுமா?



அருவருக்கத் தக்க அந்தக் காட்சியை நான் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா?—மாட்டேன்; உன்னுடைய கால்களைக் கொண்டு நீ நிற்கப் பழகும் வரை நான் உனக்கு ஒன்றுமே கொடுக்கமாட்டேன்!" என்று ஒரேயடியாக மறுத்துவிட்டான் கொடாக்கண்டன்.

இப்படியே விடாக்கண்டன் எதைக் கேட்டாலும் கொடாக்கண்டன் அவனுக்கு மேற்கூறிய உபதேசத்தையே செய்து வந்தான்.

ஒரு நாள் இருவரும் ஏதோ காரியமாக அடுத்த ஊருக்குச் சென்றார்கள். வழியில்




கன்னங்கள் தலையணையோடு ஒட்டிப் படிந்திருந்த இடத்தில் கண்ணீர்க் கரை காணப் பட்டது. அடித்த கைகளே அவனை அணைத்துக் கொண்டிருந்தன. அதைக் கண்ட நான் மனம் உருகி விட்டேன். அடிப்பவளும் அவள் தான்; அணைப்பவளும் அவள் தானே?

---

நானும் பாலுவின் முகத்தோடு என் முகத்தை ஒட்டி வைத்துக் கொண்டேன். என்னையு மறியாமல் கண்ணீர் சுரந்தது. கான் நடுங்கிய கையுடன் அவள் கண்ணீரைத் துடைக்க முயன்றேன். அவள் விழித்துக் கொண்டாள். காலைக் கதிரவனின் ஒளி பட்டு அவள் கண்ணீர் முத்துப் போல மின்னியது. மெதுவாக அவள் தன் கண்ணீரைத் துடைத்துக் கொள்ள முயன்றாள். ஆனால் அதற்குள்ளாகவே 'பொல பொல' வென்று கண்ணீர் மேழ உதிர்ந்தது. அவள் தலை குனிந்து விம்மினாள். அடுத்த கணமே சிரிக்க முயன்றாள்...... ஆனால் அவளால் சிரிக்க முடியவில்லை. விம்மல் சிரிப்பை மிஞ்சியது. அதைக் காண எனக்குச் சகிக்கவில்லை. அவளது கண்ணீரைத் துடைப்பதற்காக அவள் அருகே எழுந்து சென்றேன். என்னுடைய பெருமூச்சும், அவளுடைய விம்மலும் சேர்ந்து பாலுவை எழுப்பி விட்டன. அவன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். இருவரும் பக்கத்திற் கொருவராய் பாலுவின் கன்னங்களில் முத்தமிட்டோம். அவன் சிரித்தான்......போக்கிரிப் பயல்! அவனது சிரிப்பிலே எங்களது மனப் புண் ஆறியது. சட்டென்று ஜன்னல் வழியாக வந்த ஒளிக் கிரணங்கள் மங்கின. என்ன காரணம் என்று பார்ப்பதற்காக, நான் ஜன்னலண்டை வந்து ஆகாயத்தை நோக்கினேன்.

நிர்மலமா யிருந்த கதிரவனின் செங்கிரணத்தைக் கருமேகம் ஒன்று சிறிது நேரம் மறைத்து விட்டுச் சென்றது. ஆனால் பின்னால் இன்னொரு மேகம் ஒன்று அதே இடத்தை நோக்கி வந்து கொண் டிருந்தது! "இதுதான் வாழ்க்கை!" என்று என் வாய் என்னை யறியாமலே சற்று உரக்கவே முணுமுணுத்தது.

சோர்ந்து போயிருந்தான். அவனுடைய இதயம், 'படக், படக்' என்று வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. ஒரு கன்னம் வேறு சிவந்து உப்பி யிருந்தது. விம்மலும், விக்கலும் அவனிடமிருந்து விடுதலை பெற்றுக்கொள்ள வெகுநேரம் பிடித்தது. 'டாண்...டாண்' என்று மணி பத்து அடித்தது. எங்கும் ஒரே நிச்சப்தமாக இருந்தது.

"நீங்கள் சாப்பிட......" என்று இழுத்தாள் திலகா. அதுதான் அவள் பெயர்.

"சரி, சரி! சாப்பாடுமாச்சு, கூப்பாடுமாச்சு...!" என்று எரிந்து விழுந்தேன். அதற்குமேல் நான் ஒன்றும் பேசவில்லை. அடுத்தகணமே திண்ணையில் என் பாயை விரித்துப் படுத்து விட்டேன். இரவு முழுவதும் தூக்கம் வரவில்லை. பற்பல எண்ணங்கள் என்னைச் சுற்றி வட்டமிட்டன. பாவம்...! ஆறுமாத கர்ப்பிணி அவள்! 'பொறுமையின் பூஷணம்' என்று நானே அவளை எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறேன். நான் இது வரை அவளைக் கடிந்து கொண்டதே இல்லை. இருந்தாலும் குழந்தையை இப்படியா அடிப்பது? மறுபடியும் உள்ளே போய் அவளைச் சமாதானப்படுத்த எண்ணி எழுந்தேன். ஆனால் அதற்குள்ளாகப் பாலுவின் அழுது சோர்ந்துபோன முகம் என் மனக்கண் முன்னே வந்து நின்றது. உடனே அவளைச் சமாதானப் படுத்தப் போகும் யோசனையைக் கை விட்டேன். நாம் இப்படி அலட்சியப் படுத்தினால்தான் இனிமேலாவது அவள் அவனை அடிக்காமல் இருப்பாள் என்று எண்ணினேன்.

வானத்தைப் பிளப்பது போல் ஒரு இடி இடித்தது. அடுத்த கணம் பளீர் என்று ஒரு மின்னல் மின்னியது. என் தீர்மானத்தை அந்த மின்னலும் ஆமோதிப்பது போல எனக்குத் தோன்றியது.

* * *

'டாண், டாண், டாண்' என்று மாதாகோவில் மணி அடிக்கத் தொடங்கியது. மெதுவாகக் கண்களைத் திறந்தேன். இரவு முழுவதும் நல்ல தூக்கம் இல்லாமல் சிந்தனையலைகளில் மிதந்து கொண்டிருந்ததால் கண்களைத் திறக்க முடியாமல் எரிய ஆரம்பித்தது. மணியோ ஐந்தரை ஆகிவிட்டது. நிச்சப்தத்தைக் கிழித்துக் கொண்டு பட்சி ஜாலங்களின் கீச்சுக் குரல்கள் வெளிவந்தன. ஒரே மூடு பனி. எல்லாம் தெளிவற்றுக் காணப் பட்டது. இரவு முழுவதும் மழை பெய்திருக்க வேண்டுமென்பதை சாலையிலோடிய தண்ணீர் மெய்ப்பித்தது. அதற்கேற்றாற்போல 'லொட், லொட், லொட்' என்று கூரையிலிருந்து தண்ணீர் சொட்டும் சத்தமும் கேட்டுக் கொண்டிருந்தது.

டாண்......டாண்......டாண்! மணியோசையைக் காது கொடுத்து அமைதியாகக் கேட்டேன். என் உள்ளத்தைப் போலவே அம் மணியோசையிலும் சோகம் ததும்பி யிருந்தது. இல்லை, என் உள்ளம்தான் அந்த மணியோசையில் பிரதிபலித்ததோ, என்னவோ? அல்லது அமைதியற்ற உள்ளத்திற்கு ஆறுதலும், சாந்தியும் அளிக்கத்தான் அது அறைகூவி யழைத்ததோ, விளங்கவில்லை! துக்கம் என் நெஞ்சைப் பிளந்தது! அவள் வேண்டுமென்றா அப்படிச் செய்தாள்? அவளோ ஆறுமாத கர்ப்பிணி! வேலைகளையும் கவனித்துக்கொண்டு பாலு செய்யும் விஷமங்களையும் அவளால் பொறுக்க முடியவில்லை! ஒரு தட்டுத் தட்டினால் பாலுவின் விஷமம் அடங்கிவிடும் என்று எண்ணி அவள் தட்டி யிருக்கிறாள். தவறிப் போய் அடி சற்றுப் பலமாகப் பட்டுவிட்டது! அதற்காக நாம் அவளை அப்படி அறைந்து விட்டோமே! ஒரு தடவைகூட அவளைக் கடிந்து கொள்ளாத நாம் இன்று சற்றும் எதிர்பாராமல் இப்படி நடந்து கொண்டது நியாயமா? இவ்வாறெல்லாம் எண்ணி நான் மிகவும் மனம் புழுங்கினேன்.

* * *

அடுத்தகணம் மளமளவென்று எழுந்து உள்ளே போனேன். கட்டிலில் நான் விட்டபடியே பாலு படுத்திருந்தான். 'பெட்ரூம்' விளக்கும் அப்படியே எரிந்து கொண்டிருந்தது. அவளும் உட்கார்ந்தபடியே அவனை ஒரு கையால் அணைத்துக் கொண்டிருந்தாள். அவள் கண்களில் கண்ணீர் தேங்கி நின்றது.



# இதுதான் வாழ்க்கை!

சம்பத்

இரவு எட்டுமணி யிருக்கும், என்றாலும் வழக்கப்படி திருச்சிரங்குன்றம் ஓய்ந்து சந்தடியற்றுக் காணப்பட்டது. மாலை நாலுமணி முதல் மூச்சுவிடாமல் பெய்து நின்றுபோன மழைக்குப் பின் சிறு சிறு தூற்றல்களும், ஓவென்ற சப்தத்துடன் கூடிய பெருங் காற்றும் சேர்ந்து மறுபடியும் பலமான மழைக்கு முகப்புக் கொடுத்துக் கொண்டிருந்தன. குட்டைகளின் கரைகளிலே வந்து முற்றுகையிட்ட மடாத்தவளைகள் ஒரு சுருதியிலும் சேராத தனிக் குரலெடுத்து அலறிக் கொண்டிருந்தன. வீதியின் ஒரு மூலையையே தனது பிதிரார்ஜித சொத்தாகவும், நிரந்தர வாசஸ்தலமாகவும் எண்ணிக் கொண்டிருந்த ஒரு சோனி நாய் எதையோ பறிகொடுத்தாற்போல் நெடுங்குரலெடுத்து ஆலாபனம் செய்து கொண்டிருந்தது.

• • •

பகல் முழுவதும் ஆபீஸில் செக்கு மாடுபோல் உழைத்துக் களைத்துப்போன நான் உள்ளத்தில் ஊக்கமின்றி வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். என் மனம் இல்லாத எண்ணம் எல்லாம் எண்ணிக் கொண்டிருந்தது. என் பழக்கப்பட்ட கால்கள் என் உணர்வின்றியே வீட்டை நோக்கிப் முன்னேறிக் கொண்டிருந்தன. என் உள்ளத்தில் எண்ணங்கள் குமுறிக் கொண்டிருந்தது போலவே, வெளியுலகிலும் கன்னங் கரிய மேகங்கள் குமுறிக் கொண்டு மழையைக் கொண்டுவந்து கொட்டுவதற்குத் தயாராயிருந்தன.

நான் சிந்தனையில் லயித்தவாறே வீட்டுக்குள் நுழைந்தேன். உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாகப் பாலுவின் அழுது வீங்கிய முகம் என்னை வரவேற்றது. சமையற் கட்டிலிருந்து வந்த புகை மிளகாயின் காரத்துடன்கூடவே என் மனைவியின் குரலையும் பிணைத்துக் கொண்டு வந்தது.

"கட்டையிலே போறவனே! மூன்று ரூபாய் 'ஹேர் ஆயிலை'க் கொட்டி உடைச்ச உனக்குப் பிடிவாதம் வேறு வேண்டியிருக்கா? சனியனே, நேற்று 'பீடிங் பாட்டிலை' உடைத்தாச்சு! இன்னிக்கு இது!......அப்பா வரட்டும் அவரையும் இரண்டு போடச் சொல்றேன்!" என்று குழந்தை பாலுவைக் கடிந்து கொண்டிருந்தாள் என் மனைவி.

பாலுவின் விம்மல் என்னைக் காந்தம் போலக் கவர்ந்தது. அவன் சிறிது விக்கி அழுதவாறே ஓடிவந்து என்னை அணைத்துக் கொண்டு "விளக்கெல்லாம் அணைஞ்சுபோச்சு! பயமாயிருந்தது. ஓடி வந்தேன், அப்பா! அப்பொழுது கால் தடுக்கி எண்ணெய் பாட்டில் உடைஞ்சு போச்சு, அப்பா!......அதற்காக அம்மா வேறு என்னைப் பளார் என்று அடிச்சுட்டா அப்பா!......" என்று அலறினான்.

பாவம்! பாலு குழந்தைதானே? இந்தக் காற்றிலும் இடியிலும் விளக்குகள் எல்லாம் அணைந்து போயிருக்கின்றன. இடியோசையைக் கேட்டுப் பயந்து போய் பாலு அம்மாவிடம் ஓடிவந்திருக்கிறான். அப்போது கால்தடுக்கிக் கீழே இருந்த எண்ணெய் பாட்டில் உடைந்திருக்கிறது. அதற்காக அவள் அவனை அடித்திருக்கிறாள் என்பதை ஊகித்துக் கொண்டே அவனை அன்புடன் தடவிக் கொடுத்தேன். அடுத்த கணம் அப்படியே வாரியெடுத்து அணைத்துக் கொண்டேன். அவன் கன்னம் தடித்துப் போயிருந்தது. அவன் விம்மலும் விக்கலும் ஓயவில்லை.

"நீங்களும் வந்துட்டேளா? அந்தச் சனியனை......" என்று கூறிக் கொண்டே அவள் என் அருகில் வந்தாள்.

அவளுடன் கூடவே தைலத்தின் வாசனையும் கலந்து வந்தது. என் அருகில் வந்ததும் எனக்கு வந்த கோபத்தில் அவளைப் பளாரென்று முன்பின் யோசியாமல் அறைந்து விட்டேன்! "ஐயோ!" என்று அலறிவிட்டாள் அவள்.

"மூதேவி! தினம் பொழுது விடிந்தால் இதுதானா வேலை? அவன் அடிபடுவதையும் அழுவதையும் நான் தினம் பார்த்துக் கொண்டிருக்கணுமா? இதை என்னிக்குதான் நீ நிறுத்தப் போகிறாயோ! தரித்திரம் பிடிச்ச மூதேவி!" என்று நான் கத்தினேன். அவள் வாய் திறந்து ஒன்றும் பதில் பேசவில்லை.

• • •

பாலுவை மெதுவாகக் கட்டிலில் படுக்க விட்டேன். பாவம்!......குழந்தை

டிருந்த காதல் கருகி மரித்திருந்தால்தான் கவலையில்லையே! அவ்வாறு சேர்ந்திருந்தால் இந்தச் சுகபோக வாழ்க்கையை நான் எதற்காக வெறுத்து உதறித் தள்ளிவிருக்கப் போகிறேன்? சித்திரலேகா! உன்னிடம் எனக்கு ஏற்பட்டுள்ள அந்தக் காதலைக் குழி தோண்டிப் புதைத்து விடவேண்டும் என்றுதான் நானும் ஆனப்பட்ட பாடு பட்டுப் பார்க்கிறேன். ஆனால் அது நடக்கவில்லை. நடக்கவும் நடக்காது போலத் தோன்றுகிறது!" என்று சொல்லியவாறே சித்திரலேகாவைத் தூக்கி நிறுத்தி ஆலிங்கனம் செய்து கொள்ளப் போனான்.

ஆனால் சித்திரலேகா சட்டென்று நகர்ந்து நின்றாள். "ஸ்வாமி, வேண்டாம்! தாங்கள் தான் என் தெய்வம்! என் உடலைத் தொடாதீர்கள். நான் பாவி! தாழ்ந்தவள்; பரிசுத்தமற்றவள்; நெறி தவறியவள்; களங்கமுள்ளவள்! என்னைத் தொட்டுத் தாங்களும் எதற்காகப் பாவத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்? வேண்டாம், என் தெய்வமே! வாருங்கள். என் மாளிகைக்குப் போகலாம். தாங்கள் தான் என்னைப் பரிசுத்தப் படுத்த வேண்டும்; தங்களுடைய சாபத்தீயில் போட்டு வாட்டி வதக்கி வேக வைத்து என்னைப் பரிசுத்தப் படுத்த வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டாள்.

"வா, சித்திரலேகா! போவோம், வா! உலகத்திலே உன் ஒருத்தியின் வார்த்தையைத்தான் என்னால் தட்ட முடியவில்லை; முடிவதும் இல்லை. நீ என்னை எவ்வளவு வீழ்த்த வேண்டுமானாலும் வீழ்த்து. தாழ்த்த வேண்டுமானாலும் தாழ்த்து. ஆனால் ஒன்று. நாளைக்கு என்னைத் தடுப்பதில்லை என்று இப்பொழுது எனக்கு நீ உறுதி மொழி அளிக்க வேண்டும். உறுதி மொழி அளித்தால் தான் நான் உன்னுடன் வருவேன்!" என்றான் பீஜகுப்தன்.

"அப்படியே உறுதி மொழி அளிக்கிறேன், ஸ்வாமி!" என்றாள் சித்திரலேகா.

அடுத்த கணமே சித்திரலேகா தன்னுடன் பீஜகுப்தனை அழைத்துக் கொண்டு தன் மாளிகைக்குப் புறப்பட்டாள். மாளிகைக்குப் போய்ச் சேர்ந்ததும் முதல் காரியமாக அவள் தன் பணிப் பெண்களை அழைத்துப் பீஜகுப்தனுக்குப் படுக்கைக்கு வேண்டிய சகல வசதிகளும் செய்து கொடுக்குமாறு உத்தரவிட்டாள்.

பீஜகுப்தன் படுப்பதற்கான சகல ஏற்பாடுகளும் முடிந்ததும் சித்திரலேகா அவனைப் பார்த்து, "ஸ்வாமி! தாங்கள் படுத்து உறங்குங்கள். நாம் நாளைக் காலையில் மீண்டும் சந்தித்துப் பேசிக் கொள்ளுவோம்" என்றாள்.

அதைச் சொல்லி முடித்ததும் அவள் அங்கிருந்து 'விர்' என்று வெகு வேகமாக வெளியே போய்விட்டாள். பீஜகுப்தன் அகல விரித்த கண்களுடன் வாய் திறவாமல் அவள் போன திசையைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். (தொடரும்)



காசுகூடக் கிடையாது. ஐசுவரியத்தையும் சுகபோக வாழ்க்கையையும் அறவே உதறித் தள்ளிவிட்டு நான் வெளிக் கிளம்பி விட்டேன். இனி என்னைத் தடுக்காதே! என்னை என் வழியே போகவிடு" என்று கெஞ்சமாட்டாக் குறையாகக் கேட்டுக் கொண்டான்.

சித்திரலேகா சட்டென்று பீஜகுப்தனுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். "முடியாது; ஸ்வாமி, முடியாது! நான் தங்களைப் போக விட முடியாது. ஒரு நாளைக்காவது தாங்கள் என்னுடைய விருந்தாளியாக இருந்து விட்டுத் தான் போக வேண்டும். என்னைக் கேட்டால் போகவே கூடாது என்று தான் நான் சொல்லுவேன். கட்டாயம் போகத் தான் வேண்டுமென்று தாங்கள் முடிவு கட்டி விட்டால் நாளைக்குப் போங்கள்" என்றாள்.

பீஜகுப்தன் தன் கைகளை வெடுக்கென்று உதறி விடுவித்துக் கொண்டான். "போ, நடன ராணி! என் முன் நில்லாதே! போ! சொல்லுவதைக் கேள். என் முன் நில்லாதே! எவ்வளவுதான் நீ முயன்றாலும் இனி உன்னால் என்னைத் தடுக்க முடியாது. உன் நாசகாரச் செய்கையின் முடிவை நீயே உன் கண்களால் பார்! பார்த்துச் சந்தோஷப் படு! சீ! ஆம்! என்ன வேண்டுமானாலும் செய். என்னைத் தடுக்காதே! என்னைப் போகவிடு! தடுக்காதே! நான் போய் வருகிறேன்!" என்றான். உடனே அவன் அவளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் மேலே நடக்கலானான்.

அதைக் கண்டதும் சித்திரலேகா ஓடிப் போய் பீஜகுப்தனுடைய கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். "தங்களைப் போகவிட முடியாது என்று நான் சொல்கிறேனே, அது தங்கள் காதில் விழவில்லையா? தாங்கள் கட்டாயம் ஒரு தடவை என் மாளிகை வரை வந்து தான் ஆக வேண்டும். ஸ்வாமி! தாங்கள் என் மீது கொண்டிருந்த காதல் கருகி மரித்து விட்டதா? — சொல்லுங்கள், ஸ்வாமி! என்ன? பேசாமல்..." அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. அவளுக்குத் தொண்டையை அடைத்து விக்கல் ஏற்பட்டு விட்டது. அடுத்த கணம் அவள் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விட்டாள்.

அதைக் கண்ணுற்றதும் பீஜகுப்தனும் தன் உணர்ச்சியை அடக்கிக் கொள்ள முடியவில்லை. "ஐயோ! உன்மீதுகொண்

அடிமேல் அடி எடுத்து வைத்து நடந்து போய்க்கொண்டேயிருந்தான். ஒரு பிச்சைக்காரனைப்போல அவன் தன் கால் போன போக்கில் பாதசாரியாக நடந்து கொண்டிருந்தான். அவனுடைய உடலை சாதாரண மக்கள் உடுத்தும் ஆடைகள் தான் அலங்கரித்திருந்தன. வழிச் செலவுக்கென்று அவன் தன் கையில் சில வெள்ளி நாணயங்கள் மட்டுமே வைத்திருந்தான். கொஞ்ச தூரம் சென்றபின் பீஜகுப்தனுக்குத் தன் பின்னால் யாரோ வருவது போன்ற காலடி ஓசை கேட்டது. அந்த ஓசை கொஞ்சம் கொஞ்சமாக அதிகமாவதாகவும் அவனுக்குத் தோன்றிற்று. உடனே அவன் பின்னால் திரும்பிப் பார்த்தான். இருட்டில் அவனுக்கு ஒன்றும் சரியாக விளங்கவில்லை. சிறிது நேரம் நின்று விட்டு அவன் இன்னும் மேலே நடந்தான்.



காலடிச் சத்தம் இன்னும் நெருங்கி வந்து விட்டது. அவன் மறுபடியும் திரும்பிப் பார்த்தான். கன்னங்கரிய இருள் சூழ்ந்த அந்த இரவில் ஒரு உருவம் துணியினால் தன் உடலை முழுவதும் நன்றாகப் போர்த்தி மூடிக்கொண்டு தன்னை நோக்கி வருவது போலப் பீஜகுப்தனுக்குத் தோன்றியது. 'இதென்ன விஹசாரம்?' என்று தனக்குள் முணுமுணுத்தவாறே அவன் மேலே நடந்தான். அதற்குள், "என் தெய்வமே!" என்று அந்த உருவம் அவனை அழைப்பது போலத் தோன்றியது.

பீஜகுப்தன் நின்றான். பிறகு அந்த உருவத்தைப் பார்த்து, "நீ யார்?" என்று அசாத்தியத் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு கேட்டான்.

"என் தெய்வமே! என் தெய்வமே! என்னை மன்னித்தருள வேண்டும்!" என்று சொல்லியவாறே அந்த உருவம் பீஜகுப்தனுடைய காலடிகளில் விழுந்து விட்டது.

பீஜகுப்தன் கரகரத்த குரலில், "யார்? சித்திரலேகாவா? என் வாழ்க்கையின் சாபக் கேடு போல நீ இங்கும் என் தொடர்ந்து வந்திருக்கிறாய்? போ! போ!" என்று சொல்லிச் 'சரேல்' என்று பின் நகர்ந்தான். "எல்லாம் தீர்ந்து விட்டது! எல்லாம் தீர்ந்த பின் நீ எதற்காக வருகிறாய்?" என்று மறுபடியும் கேட்டான்.

"என் தெய்வத்தின் பாத தூளிகளைச் சிரசில் தரித்துக் கொள்வதற்காக—என் தெய்வத்தை வழிபட்டுப் பூஜிப்பதற்காக! வேறு எதற்காக வருகிறேன்?" என்று கேட்டவாறே சித்திரலேகா எழுந்து நின்றாள். பிறகு, "ஸ்வாமி! நான் தங்கள் வாழ்க்கையைப் பாழ்படுத்திவிட்டேன்; தங்களை கெடுத்துத் தங்கள் வாழ்க்கையை மண்ணோடு மண்ணாக்கி விட்டேன்! தாங்கள் எனக்குச் சாபம் கொடுங்கள்; தண்டனை அளியுங்கள். திட்டுங்கள்; வையுங்கள்; என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். ஆனால் என்னை ஒரேயடியாக வெறுக்காதீர்கள்!" என்றாள்.

அதைக் கேட்டதும் பீஜகுப்தனுக்கு உடல் முழுவதையும் ஒரேயடியாகத் தூக்கி வாரிப்போட்டது. அவன் மிகவும் தழதழத்த குரலில், "சித்திரலேகா! எல்லாம் தீர்ந்து விட்டது. எல்லாவற்றையும் தீர்த்து ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தவளும் நீ தான்!—அன்று நான் உன்னை மன்றாடிக் கேட்டேன். அப்பொழுது நீ குமாரகிரியின் குடிசையை விட்டு விட்டு என்னிடம் வரவில்லை; வரச் சம்மதமும் தெரிவிக்கவில்லை. நானும் உன்னை எதிர் பார்த்து எதிர்பார்த்து ஏமாந்தேன். கடைசியில் நம்பிக்கை இழந்து இந்த முடிவுக்கு வந்தேன்; இதைக் காரியாம்சத்திலும் நிறைவேற்றத் துணிந்தேன். இவ்வளவு தூரம் நான் முன்னேறிய பிறகு என்னைக் கலக்க வைப்பதற்காக, மறுபடியும் என் மனதைச் சஞ்சலத்தில் ஆழ்த்துவதற்காக நீ ஏன் வந்திருக்கிறாய்? என்னிடம் இப்பொழுது ஒன்றும் இல்லை. என் உள்ளத்தில் இனி எந்த விதமான உணர்ச்சிக்கோ ஆசைக்கோ இடம் இல்லை. கையிலும் கால்

சத்தம்—தேம்பித் தேம்பி அழும் சத்தம் கேட்டது.

பீஜகுப்தன் சக்கரவர்த்திக் கெதிரே தலை வணங்கி, "மகாராஜா! நான் இவ்வளவு புகழுக்கு பாத்திரனேயல்ல. நான் இன்று ஒரு பிச்சைக்காரனுக்குச் சமமாக தேச யாத்திரைக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். தாங்கள் தான் என்னை ஆசீர்வதித்து விடைகொடுத்து வழி அனுப்ப வேண்டும்" என்று மிகவும் பவ்யமாக வேண்டிக் கொண்டான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் எல்லோருக்கும் கை தூக்கிக் கும்பிட்டுவிட்டுப் பீஜகுப்தன் வாசற்புறத்துக்குப் புறப்பட்டான். வந்திருந்த விருந்தினர்கள் அனைவரும் இரு தரப்பிலும் வரிசையாகச் சுவர் வைத்தது போல நின்று கொண்டிருந்தனர். ஒற்றையடிப் பாதைபோல நடுவில் விடப்பட்டிருந்த வழியே பீஜகுப்தன் வாசற்புறத்தை நோக்கி முன்னேறலானான். அப்பொழுது அவனுடைய முகத்திலே தெய்வீகப் புன்னகை ஒன்று படர்ந்திருந்தது. வந்திருந்த விருந்தினர்களும் அவனிடம் அன்றுவரை என்றுமே கண்டிராத தேஜஸ் சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் கண்ணுற்றனர். கிழவர்கள் முதற்கொண்டு குழந்தைகள்வரை பக்தி சிரத்தையுடன் கை கூப்பிக்கொண்டு கண் கொட்டாமல் அவனையே பார்த்தவாறு நின்றனர். சகல விதமான சுகபோகங்களுக்கும், சகலவிதமான செல்வங்களுக்கும் சகல விதமான சக்திகளுக்கும் உறைவிடமான அந்தக் கும்பல் வழியே, பீஜகுப்தன் அமைதி, தியாகம் இவற்றின் பெருமை முகத்தில் தாண்டவமாட, அவற்றின் பெருஞ் சுமையைத் தாங்கமாட்டாதவன் போல மிகவும் மெதுவாக அடிமேல் அடிவைத்து நடந்து சென்றான்.



வெளியே வந்ததும் பீஜகுப்தனுடைய ஊழியர்கள் கைகட்டி வாய் புதைத்து ஊழியமே உருவாக நின்று கொண்டிருந்தனர். பீஜகுப்தனைப் பார்த்ததும் அவர்கள் அழத் தொடங்கிவிட்டனர். அவர்கள் என்ன செய்வார்கள், பாவம்! உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த வருத்தம் கண் வழியே நீராகப் பெருகி ஓடத் தொடங்கியது. அந்தத் துயரக் காட்சியைக் கண்ட பீஜகுப்தன் சிறிது நேரம் தயங்கி நின்றான். அங்கிருந்த ஒவ்வொரு ஊழியனையும் ஏற இறங்கத் தன் கருணை தோய்ந்த கண்களால் ஒரு முறை பார்த்தான். அதற்குப் பிறகு, "நீங்கள் எல்லோரும் சுவேதாங்கனை என்னைப் போலவே கருத வேண்டும். என்னைப் போலவே நடத்த வேண்டும். அத்துடன் என்னை மறந்து விடுவதற்கும் முயற்சிக்க வேண்டும்" என்றான்.

அவன் சொன்னதைக் கேட்டதும் ஊழியர்கள் இன்னும் உரக்க அழ ஆரம்பித்து விட்டனர். சிலர் சேர்ந்தாற்போல, "நாங்களும் தங்களுடன் கூடவே வந்து விடுகிறோம்!" என்று மிகவும் தழுதழுத்த குரலில் கூறினார்கள்.

அதைக் கேட்டதும் பீஜகுப்தன் தன்னுடைய குரலில் மிகவும் கம்பீரத்தை வரவழைத்துக் கொண்டு, "என்ன சொன்னீர்கள்? என்னுடன் கூட வந்து விடுவதாகவா? கூடாது, கூடாது! நீங்கள் எல்லோரும் இங்குதான் இருக்க வேண்டும். யாரும் இங்கிருந்து எங்கும் போகக் கூடாது. புரிந்ததா? இது என் உத்தரவு. ஜாக்கிரதை!" என்றான்.

கடுமை தொனிக்கும் குரலில் பீஜகுப்தன் உத்தரவிட்டதைக் கண்டதும் எல்லோரும் அப்படியே நிலைகலங்கி ஸ்தம்பித்துப் போய் விட்டார்கள். பீஜகுப்தன் சிறிது நேரம் காம்பீர்யமே உருவெடுத்தவனாக நின்றான். பிறகு அதே கம்பீரத்துடன் எதையும் பொருட்படுத்தாமல் நடந்தான். ஊழியர்கள் ஆடாமல் அசையாமல் சிலையைப் போல் நின்றவாறு பீஜகுப்தன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

நள்ளிரவு கடந்துவிட்டது. நகரத்தில் எங்கு பார்த்தாலும் ஏகமாக நிசப்தம் நிலவியிருந்தது. பீஜகுப்தன் மெதுவாக




### முப்பத்தேழாம் அத்தியாயம்

## இதென்ன கிரஹசாரம்?

சுவேதாங்கனுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. விருந்துக்குச் சக்கரவர்த்தி, அரசாங்க அதிகாரிகள் மற்றும் சிற்றரசர்கள் முதலியவர்கள் வந்திருந்தார்கள். அன்று பீஜகுப்தனே எல்லோரையும் நேசில் மலர்ந்த முகத்துடன் வரவேற்று உபசரித்துக் கொண்டிருந்தான். மேலுக்கு அவன் எல்லோரிடமும் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருப்பவனாகக் காணப்பட்ட பொழுதிலும், உள்ளூற அவன் மிகவும் மனம் வெதும்பிக் கொண்டிருந்தான். அவனுக்கு உடல், உள்ளம் எல்லாம் பற்றி எரிந்து கொண்டிருந்தது. போதாக் குறைக்கு அன்று சித்திரலேகா விருந்துக்கு வராமல் வைத்துவிட்டது வேறு மனதை என்னவோ செய்து கொண்டிருந்தது. பாடலிபுத்திர நகரத்தை விட்டு வெளியேறுவதற்கு முன்னால் கடைசியாக ஒரு முறையாவது சித்திரலேகாவைக் கண்டு பேசவேண்டும் என்று அவன் மனதுக்குள் எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். ஆனால் அவன் விரும்பிய காரியம் கை கூடவில்லை. ஏனெனில் சித்திரலேகா அவன் எண்ணியிருந்தது போல விருந்துக்கு வராமல் வைத்து விட்டாள்.

* * *

விருந்து முடிந்ததும், சக்கரவர்த்தி சுவேதாங்கனுக்குத் தன் வாழ்த்துக்களைத் தெரிவித்தார். அது மட்டும் அல்ல; சிற்றரசன் என்ற பட்டம் சூட்டி அவனைக் கௌரவிக்கவும் செய்வித்தார். அதற்குப் பிறகு அவருடைய பார்வை பீஜகுப்தனின் மீது திரும்பியது. பீஜகுப்தனைத் தன் அருகில் வருமாறு சமிக்ஞை செய்தார் சக்கரவர்த்தி. அவன் அருகில் வந்ததும் அவனுடைய இருகைகளையும் பற்றிக் கொண்டு, அவனை மிகவும் அன்புடன் ஒரு முறை பார்த்தார். பிறகு அவன் கையைப் பற்றியவாறே எழுந்து நின்றார்.

சக்கரவர்த்தி எழுந்து நிற்பதைக் கண்டதும் எல்லோருமே எழுந்து நின்றனர். மாளிகை முழுவதும் நல்ல நிசப்தம் நிலவியிருந்தது. சக்கரவர்த்தி தன் குரலைக் கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார்:—

"பீஜகுப்தா! நீ மிக மிகப் பெரியவன். நடக்கக் கூடாத காரியத்தையும் நீ நடத்திக் காண்பித்து விட்டாய். நீ சாதாரணமான மனிதன் அல்ல; தெய்வாம்சம் பொருந்தியவன். உன்னைத் தெய்வம் என்று சொன்னாலும் தகும். இன்று பாரத நாட்டின் சக்கரவர்த்தியாகிய சந்திரகுப்த மௌரியன் உன் காலடிகளில் பணிகிறான்."

அதைச் சொல்லி முடித்ததும் சக்கரவர்த்தி சந்திரகுப்த மௌரியர் பீஜகுப்தனுக்குத் தலைவணங்கித் தன் வணக்கத்தைத் தெரிவித்தார். அங்கே கூடியிருந்த விருந்தினர்கள் அனைவரும் சேர்ந்தாற் போல் ஒரு முகமாகப் பீஜகுப்தனுக்குத் தலை வணங்கித் தங்கள் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டனர். பெண்களின் கும்பலிலிருந்து விக்கலும் விம்மலும் சேர்ந்து அழும்







1863-ம் ஆண்டில் பம்பாய்க்கும் தானாவுக்கும் இடையே (22 மைல்) தான் முதல் முதல் ரயில் ஓடத் தொடங்கியது. இந்தியாவில் இப்போது மொத்தம் 72,000 ஸ்டேஷன்கள் இருக்கின்றன. மொத்தம் 33,865 மைல் நீளம் ரயில் தண்டவாளம் போடப்பட்டிருக்கிறது. ☆ ☆ ☆



மேலே ஆறு கண்ணாடி புட்டிகளும், ஏழு மூடிகளும் இருக்கின்றன. அவற்றில் சரியான ஆறு மூடிகளைக் கண்டு பிடித்து அந்தந்த புட்டிகளில் பொருத்த வேண்டும். ☆ ☆ ☆

## செய்து பார்!







நம் தேசத்திலேயே மிகவும் உயரமான நீர் வீழ்ச்சி மைசூரில் இருக்கிறது. ஜெர்ஸொப்பா என்று பெயர். உயரம் 830 அடி. ☆ ☆



1849-ம் வருஷம் வால்டர் ஹண்ட் என்ற அமெரிக்கர் ஸேப்டி பின்னைக் கண்டு பிடித்தார். ☆ ☆ ☆ ☆



வாடர்மென் என்ற அமெரிக்கர் 1884-ல் பௌண்டன் பேனாவைக் கண்டு பிடித்தார். ☆ ☆ ☆

இந்தியாவிலேயே மிகப் பெரிய மிருகக்காட்சி சாலை கல்கத்தாவைச் சேர்ந்த அலிபூர் என்ற இடத்தில் இருக்கிறது. ☆ ☆



முன்பு அவன் பாலாவை மறந்திருந்தான். இப்போது அவனுக, வேண்டுமென்றே பாலாவை மறக்கவேண்டியிருந்தது; அதாவது மறந்து விட்டதாகக் காட்டிக் கொள்ள வேண்டியிருந்தது. அவன் தன் காரியம் ஆக வேண்டும் என்பதற்காக மிகவும் சிரமப் பட்டு, பாலாவை மறந்துவிட்டது போலவே காட்டிக் கொண்டான். அன்றைக்குச் சாயங்காலம் கிழவி வெளியே போயிருந்த சமயம் பார்த்து முத்துவும் வெளியே புறப்பட்டான். இதுவரையில் அவன் கிழவியின் வீட்டுக்கு வந்திருந்து, வீட்டை விட்டு எங்கேயும் வெளியே போனதில்லை. இருந்தாலும் அன்று தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அந்த வீட்டுத்தோட்டத்து வழியாக வெளியே புறப்பட்டு அவன் அந்த ஊரை அடுத்த ஒரு காட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். (தொடரும்)

### தெரிகிறதா, பாருங்கள்!

ஐந்தில் முடியும் எந்த எண்ணையும் அதே எண்ணைக் கொண்டு பெருக்க ஒரு சுருக்கு வழி இருக்கிறது. உங்களுக்குத் தெரிகிறதா, பாருங்கள்!

சென்ற வார விடுகதைகளுக்கு விடை:
1. நத்தை 2. இளநீர்

## விளையும் பயிர்

அமெரிக்க நாட்டில் புகழ்பெற்று விளங்கிய ஜனாதிபதிகளில் அப்ரஹாம் லிங்கனும் ஒருவர். அவர் மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். அவருக்கு ஜார்ஜ் வாஷிங்டனின் சரித்திரம் என்றால் உயிர்!

ஜார்ஜ் வாஷிங்டனின் சரித்திரத்தில் இருந்த ஒரு வாக்கியம் அப்ரஹாம் லிங்கனுடைய மனதை மிகவும் கவர்ந்தது. அந்த வாக்கியம் இதுதான்:— "அடிமைத் தனம் என்பது பாவம் இல்லையென்றால் உலகத்தில் பாவம் என்று ஒன்றுமே கிடையாது."

தன் மனதைக் கவர்ந்த அந்த வாக்கியத்தை அழகான காகிதம் ஒன்றை எடுத்து, அழகழகான அச்சுப் போன்ற எழுத்துக்களில் எழுதிவைத்துக் கொண்டார். அதைப் பெரும் பொக்கிஷமாக நினைத்து, எந்நேரத்திலும் தன் அருகிலேயே தன் புஸ்தகக் கட்டுடன் வைத்துக் கொண்டிருந்தார்.

ஒரு சமயம் ஏழையான அவருடைய தாய் தந்தையர் பிழைப்பின் பொருட்டு அயலூருக்குச் செல்ல நேர்ந்தது. வழியில் இருட்டி விடவே, அவர்கள் ஒரு சத்திரத்தில் தங்கினார்கள். சாப்பிட்டு முடிந்ததும் குழந்தையான லிங்கன், தன் உயிருக்குயிரான புஸ்தகக் கட்டைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு படுத்துத் தூங்கிப் போய் விட்டார்.

தலைக்கு உயரமாக வைத்துக் கொள்ளத் தலையணை ஒன்றும் இல்லாததால் அவருடைய தந்தையால் தூங்க முடியவில்லை. ஆகவே அப்ரஹாம் லிங்கனிடமிருந்த புஸ்தகக் கட்டை மெதுவாக எடுத்துத் தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டு தூங்கி விட்டார்.

நள்ளிரவில் அகஸ்மாத்தாகக் கண் விழித்த லிங்கன் தன் பக்கத்தில் இருந்த புஸ்தகக் கட்டைக் காணாமல் நாலா பக்கமும் சுற்றிப் பார்த்தார். புனிதமான வாக்கியத்தைத் தாங்கிக் கொண்டிருந்த காகிதத்துடன் கூடிய தன் புஸ்தகக் கட்டை, தந்தை தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டு தூங்குவது லிங்கனுக்கு பிடிக்கவில்லை.

அவர் எழுந்து சென்று தன் தொடையை தன்னுடைய தந்தையின் தலைக்கு உயரமாகக் கொடுத்தார். பிறகு மெதுவாகத் தன் புஸ்தகக் கட்டை உருவி எடுத்துக் கொண்டார்.

தகப்பனார் விழித்தெழும் வரையில் அவர் அப்படியே ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தார். கண் விழித்தெழுந்த தகப்பனார் விஷயம் என்னவென்று விசாரித்தார். லிங்கனின் பதிலைக் கேட்டதும் அவர் மகிழ்ச்சியுடன், "அடிமைத் தனத்தை அகற்றும் விஷயத்தில் உனக்கு வெற்றி கிட்டட்டும்!" என்று ஆசீர்வதித்தார். தந்தையின் ஆசீர்வாதம் வீண் போகவில்லை; அப்ரஹாம் லிங்கன் அமெரிக்காவின் ஜனாதிபதியாகி நீக்ரோவர்களின் அடிமைத் தனையை அறவே ஒழித்துவிட்டார். —அஷயம்



# மூன்று நண்பர்கள் 7




மண்மூடிக் கிடந்த அந்த இடத்தில் 'பசேல்' என்று ரோஜாச் செடிகளின் இளந் தளிர்கள் காட்சி அளித்தன. அதைப் பார்த்ததும் அந்தக் கிழவிக்கு வந்த கோபத்துக்கு ஒரு எல்லை இல்லை.

"முத்து, இங்கே வா! அங்கே என்ன செய்கிறாய்? காலை வேளையில் எழுந்ததும் எழுந்திருக்காததுமாகத் தோட்டத்தில் உனக்கு என்ன வேலை? உள்ளே வா!" என்று உரக்கக் கத்தினாள் கிழவி.

முத்துவுக்கு அவள் குரலைக் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது. பாவம், அவன் அப்படியே நடுங்கிப் போய் விட்டான். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு உள்ளே போய்விட்டான்.

அதற்கு அப்புறம் கிழவி முத்துவை ஒன்றும் கேட்கவில்லை. முத்துவும் கிழவிக்கு எதிரில் பாலாவைப் பற்றிய பேச்சை எடுப்பதில்லை. ஆனால் அவனுடைய மனசில் மாத்திரம் இனிமேல் அந்த இடத்தில் தங்கக்கூடாது என்ற எண்ணம் உண்டாகிவிட்டது. பாலாவைப் பற்றிய பேச்சை எடுத்தாலே கிழவிக்குப் பிடிக்காது என்று முத்துவுக்குத் தெரியும். ஆகையால் அவன் தன் மனசிலிருந்த துக்கத்தை வெளிக்குக் காட்டாமல் பொறுத்துக் கொண்டிருந்தான்.

முத்து, கிழவியிடமிருந்து கலடமாகத் தப்பிப் போய்விட முடியாது. சமயம் பார்த்துத் தான் அவளிடமிருந்து நழுவ வேண்டும். அதற்காக அவன் அவளிடம் மிகவும் அன்புள்ளவன் மாதிரி நடிக்கவேண்டியிருந்தது. அதைவிடக் கஷ்டமான காரியம் ஒன்றையும் முத்து செய்ய வேண்டியிருந்தது. ஆமாம். பாலாவைப்பற்றி அவன் நினைப்பதாகவே காட்டிக் கொள்ள முடியவில்லை. கிழவியின் மந்திரச் சக்தியினால்

கிழவி முத்துவுக்கு விதவிதமான பக்ஷணங்களைச் செய்து கொடுத்தாள்.

இப்படி இருக்கும்போது, ஒருநாள் முத்து மிகவும் சீக்கிரமாக அதிகாலையிலேயே எழுந்துவிட்டான். வழக்கம் போல், அருகில் படுத்திருக்கும் கிழவியைப் பார்த்தான். அவளைப் படுக்கையில் காணவில்லை.

உடனே முத்து திடுக்கிட்டு அவளை அங்கும் இங்கும் தேடினான். கடைசியில் வீட்டுப் பின் பக்கத்துத் தாழ்வாரத்தில் கிழவியைக் கண்டான்.

அப்பொழுது கிழவி ஸ்நானம் செய்துவிட்டுக் கையில் ஜபமாலையுடன் உட்கார்ந்து மௌனமாக ஜபம் செய்து கொண்டிருந்தாள்.

இதைப் பார்த்ததும் முத்துவுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. இத்தனை நாட்களாகக் கிழவி முத்துவுக்குத் தெரியும்படியாகத் தன் மந்திர ஜபங்களைச் செய்ததில்லை.

"பாட்டி, பாட்டி! என்ன ஜபம் செய்கிறாய்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டுவிட்டு, முத்து கிழவியையே உற்றுப் பார்த்தான். அவள் முகம் பார்ப்பதற்கு அப்பொழுது பயங்கரமாக இருந்தது.

முத்து அவளைப் பார்க்கப் பிடிக்காமல் வெறுப்போடு தோட்டத்துப் பக்கம் ஓடினான். மல்லிகை, முல்லை, சம்பங்கி இவையெல்லாம் நிறைந்திருந்த தோட்டத்தைக் கடந்து ஒரு செடியும் இல்லாமல் வெறும் பாழாகக் கிடந்த பகுதிக்கு வந்து சேர்ந்தான் முத்து.

ஒரு செடியும் இல்லாதிருந்த அந்த இடத்தை முத்து ஆச்சரியத்துடன் கவனித்துப் பார்த்தான். அங்கே, கிழவி கத்தரித்து விட்டிருந்த ரோஜாச் செடிகள் கொஞ்சம் மண்ணுக்கு வெளியே தலையை நீட்டிச் சிறு இலைகள் விட்டிருப்பது தெரிந்தது. முத்து இன்னும் நன்றாய்க் கவனித்துப் பார்த்தான்.

அவ்வளவுதான். "இதென்ன? ரோஜாச் செடிகளையல்லவா யாரோ கத்தரித்திருக்கிறார்கள்; ஐயோ! பாலா பார்த்தால் துடித்துப்போய் விடுவானே!" என்று முத்து இறைந்து கத்திவிட்டான். ரோஜாச் செடியைப் பார்த்ததும் அவனுக்கு பாலாவின் ஞாபகம் தன்னை அறியாமலே வந்துவிட்டது. மேலும், கிழவி தினம் காலையில் மந்திர ஜபம் செய்தால்தான் அவளது மாய வேலைகள் நீடித்து நிற்கும். முத்து தினந்தோறும் நேரஞ் சென்று எழுந்திருந்ததனால் அவன் கிழவி ஜபம் செய்வதைப் பார்த்ததே இல்லை. இன்றைக்கு என்னவோ திடீரென்று அவன் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு விட்டான். ஆதலால் கிழவியின் போக்கிரித்தனம் வெளியாகிவிட்டது.

முத்து பெரிய குரலில் கத்தியதும் கிழவியின் நிதானம் கலைந்து விட்டது. உடனே அவள் எழுந்து முத்து இருந்த தோட்டத்துப் பக்கம் ஓடி வந்தாள்.

முத்து ஒரு மேடைமீது உட்கார்ந்து கண்ணீர்விட்டுக் கொண்டிருந்தான்.

"பாலா, உன்னைப் பிரிந்து எத்தனை நாட்களாகச் சும்மா இருந்துவிட்டேன். உன்னைத் தேடவேண்டும் என்று வந்த நான் இங்கே சாப்பிட்டுக்கொண்டு ஆனந்தமாகக் காலம் கழிக்கிறேனே! நீ எங்கே எல்லாம் அலைகிறாயோ! என்னவெல்லாம் சிரமப் படுகிறாயோ!" என்று வாய் விட்டுக் கதறிக்கொண்டிருந்தான் முத்து.

அவன் கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்த் துளிகள் வெட்டப்பட்ட ரோஜாச் செடிகளின் மேல் விழுந்து அவை தளிர்விட ஆரம்பித்தன!



பாப்பா மலர்

# அதிசயப் பிரயாணம்



ஸோமாஸ்

## 4. தப்பி ஓடினான்!

அந்த மாயக் கிழவியின் வீட்டில் முத்துவுக்குப் பொழுது போவது கொஞ்சங்கூடச் சிரமமாயில்லை. அவனோடு விளையாடுவதற்குத்தான் நாய்க்குட்டி, பூனைக்குட்டி, கீரிப்பிள்ளை இவையெல்லாம் இருக்கின்றனவே!

அதிலும் நாய்க் குட்டியோடு விளையாடுவது என்றால் முத்துவுக்கு அளவு கடந்த பிரியம். அவனும் நாய்க்குட்டியும் விளையாட ஆரம்பித்து விட்டால் முத்து தன்னையே மறந்து விடுவான். அதேபோல நாய்க்குட்டியும் தன்னை மறந்து அவனோடு விளையாடும்.

முத்து இப்படி உற்சாகமாக விளையாடிக் கொண்டிருப்பதில் அந்தக் கிழவிக்கு மிகவும் சந்தோஷம்தான். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் அவளுக்கு முத்துவிடம் பயமாயிருந்தது. அதற்காக அவள் மிகவும் ஜாக்கிரதையாக இருந்தாள்.

அவள் வீட்டுத் தோட்டத்தில் ஒரு பகுதியில் ரோஜாச் செடிகள் நிறைய இருந்தன. அவற்றில் பூக்களும் அமோகமாகப் பூத்துக் குலுங்கின. அந்த ரோஜாச் செடிகள் விஷயமாகத்தான் கிழவி பயப்பட்டாள். முத்து கிழவி வீட்டுக்கு வந்ததும் தனக்கு ரோஜாப் பூவின் மேல் உள்ள ஆசையைத் தெரிவித்து விட்டானல்லவா? பாலாவும் முத்துவும் ரோஜாத் தோட்டத்திலேயே விளையாடிக் கொண்டிருப்பார்கள் என்ற செய்தியை அவள் முக்கியமாக ஞாபகம் வைத்துக் கொண்டாள். தப்பித் தவறி ரோஜாச் செடி முத்துவின் கண்களில் பட்டு விட்டால் அவனுக்கு உடனே பாலாவின் நினைவு வந்து விடுமே! அப்புறம் அவன் அவளிடம் இருப்பானா?

முத்துவை அப்படி விட்டு விடுவதற்குக் கிழவிக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? அதற்காகக் கிழவி ஒரு ஏற்பாடு செய்தாள். முத்துவுக்குத் தெரியாமல் அத்தனை ரோஜாச் செடிகளையும் கத்தரித்து விட்டு அவற்றின் மீது மண்ணைப் போட்டு மூடி விட்டாள். முத்துவின் கண்ணில் ஒரு ரோஜா மொட்டு கூடப் படவில்லை. ஆகையினால் அவனுக்குத் தன் ஊர் ஞாபகமோ, தானும் பாலாவும் வீட்டை விட்டுப் புறப்பட்டதோ, அவன் அவளைப் பிரிந்து சென்றதோ ஒன்றும் நினைவில்லை. ஆகவே, கிழவிக்கு மிகவும் சௌகரியமாய்ப் போய் விட்டது.



நாட்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்று ஓடிக் கொண்டே இருந்தன. முத்து கிழவிக்கு ரொம்பவும் பிரியமானவனாக ஆகிவிட்டான்.

மைதானத்தில் சென்று எதிரியுடன் யுத்தம் செய்வதற்கு முன், லஷ்கரில் சிப்பாய்கள் பயிலுவதைப் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அது போல் இல்லறமும் வைராக்கியம் பயிலும் இடமாகும். சில சௌகரியங்களை அமைத்துக் கொண்டு துறவு மார்க்கத்தைப் பயிலுவதே இல்லறத்தின் பயன். உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளுவதற்குக் குடும்ப வாழ்க்கையை ஒரு பயிற்சிக் களமாகப் பாவித்துக் கொண்டு இல்லறம் நடத்துங்கள்.

* * *

தகப்பனோடோ, மனைவியுடனோ சண்டை பிடித்துக் கொண்டு அதற்காகத் துறவு பூண்டால் அது உண்மையான சந்நியாசமாகாது. அந்தத் துறவு வெறுப்புத் துறவாகும். அது நிலைக்காது. வெகு சீக்கிரத்தில் அப்படிப் பட்ட துறவியின் மனம் பழைய விஷயங்களில் சென்று மறுபடி உலக வாழ்க்கை ஆரம்பமாகும்.

இல்லற வாழ்க்கையை ஆண்டவனிட்ட கடமை என்று சரியாகப் பக்தியுடன் நடத்தி, எல்லாம் ஈசன் பணி என்று மனதைப் பழக்கப்படுத்தி, பக்குவமடைந்த பின் துறவு பூண்டவர்கள் துறவு நிலையின் பயனைப் பெறுவார்கள். ஒரே பரம்பொருளின் தோற்றங்களே எல்லா உயிரும் என்கிற மெய்யுணர்வைப் பெறுவார்கள்.

* * *

ஒரு கிராமத்தில் ஆண்டி மடம் ஒன்று இருந்தது. அங்கே பல ஆண்டிகள் ஓடு ஏந்தி ஊருக்குள் சென்று பிச்சைச் சோறு வாங்கிச் சாப்பிட்டு வந்தார்கள்.

ஒரு நாள் ஆண்டிகளில் ஒருவன் ஊரில் சுற்றிய காலத்தில் ஒரு ஜமீன்தார் தன் ஏழைச் சேவகனைப் பலமாகப் புடைத்துக் கதறச் செய்ததைப் பார்த்தான். அதனால் மனம் மிகவும் நொந்து "ஐயா, போதும் அடித்தது! எனக்காக நிறுத்தி விடுங்கள். உங்களுக்கு நன்மையாகுக!" என்று ஆண்டி ஜமீன்தாரை வினயமாக வேண்டிக் கொண்டான்.

இதைக் கேட்டதும் ஜமீன்தாருக்கு முன்னை விடக் கோபம் அதிகமாகி விட்டது. சேவகனை விட்டுவிட்டு, தமக்குப் புத்தி சொல்ல வந்த ஆண்டியைக் கண்டபடி அடிக்க ஆரம்பித்தார்.

ஆண்டி நன்றாகப் புடைக்கப்பட்டுப் பிரக்ஞையில்லாமல் தரையில் விழுந்தான். அவன் விழுந்ததும் ஜமீன்தாருடைய ஆவேசம் தீர்ந்து தம் வீட்டுக்குள்ளே போய்விட்டார்.

யாரோ வழியில் போகிறவர்கள், ஆண்டி அடிபட்டு விழுந்து கிடப்பதைப் பார்த்து மடத்துக்குப் போய்ச் செய்தி சொன்னார்கள்.

ஆண்டிகள் ஓடிப் போய், ஜமீன்தார் வீட்டு வாசலில் கிடந்த தங்கள் சகோதரனைத் தூக்கி எடுத்து மடத்துக்குக் கொண்டுபோய்க் குளிர்ந்த ஜலம் தெளித்து, வாயில் தண்ணீரும் பாலும் ஊற்றிச் சிகிச்சை செய்தார்கள். வெகு நேரங் கழித்து ஆண்டிக்குப் பிரக்ஞை வந்தது. கண் திறந்து, நினைவு வந்த மாதிரி காணப்பட்டதும் ஒருவன், "தம்பி! நான் யார் தெரிகிறதா?" என்றான்.

"அண்ணே! தெரிகிறது! நீதான் முதலில் என்னை அடித்தாய்; இப்போது என்னுடைய வாயில் நீயே பால் ஊற்றுகிறாய்" என்றான்.

துறவி ஞானப் பிரகாசம் அடைந்தவனானபடியால் தன்னை அடித்தவனையும் தனக்குப் பணிவிடை செய்தவனையும் ஒன்றாகக் கண்டான். நன்மையும் தீமையும் சுகமும் துக்கமும் ஆண்டவன் லீலை அல்லவோ!






## 13. நீரின்மேல் படகு

நீரில் படகு தங்குகிறது. ஆனால் படகுக்குள் தண்ணீர் புகும்படி விடக் கூடாது. புகவிட்டால் ஓடம் முழுகிப் போகும். அப்படியேதான் உலக வாழ்க்கையிலே இருக்கும் பக்தர்களின் நிலையும். உலக வாழ்க்கைக்கு வேண்டிய காரியங்கள் செய்து கொண்டிருக்கலாம். ஆனால் உள்ளத்துக்குள் உலகத்தைப் பாயவிடக் கூடாது. விட்டால் படகு கவிழ்ந்து போகும்!

இல்லறம் நடத்துங்கள். ஆனால் ஒரு கையால் வாழ்க்கைக் கடமைகளைச் செய்துகொண்டு ஒரு கை பகவான் காலைப் பிடித்துக் கொண்டே இருக்க வேண்டும். வேலை செய்யாமலிருக்கும் போது இரண்டு கைகளும் ஆண்டவன் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கப் பயன்பட வேண்டும்.

நல்ல செவிலித் தாயானவள் தன் எஜமானியின் குழந்தையை அன்புடன் எடுத்து, பால் கொடுத்து வளர்க்கிறாள். பெற்ற தாயைப் போலவே அன்பு செலுத்திப் பால் கொடுத்து வந்தாலும் 'இந்தக் குழந்தை எனக்கு ஒன்றும் செய்யப் போவதில்லை; இது என்னுடைய சொத்து அல்ல; பால் ஊட்டுவதுதான் இதனுடன் என் சம்பந்தம்' என்று செவிலித் தாய் தன் கடமையைச் செய்வதுபோல் பக்தர்கள் இல்லறத்தை ஆண்டவன் பணியாக எண்ணிச் செய்து வருவார்கள்.

• • •

“ஒரு வீட்டில் வேலைக்காரி என்ன உணர்ச்சியோடு 'நம்ம வீடு' என்கிறாள்? அவள் சொந்த வீடு எங்கேயோ ஒரு கிராமத்தில் இருக்கிறது; பட்டணத்தில் வேலைசெய்து வருகிறாள். வேலைசெய்யும் வீட்டை 'நம்ம வீடு' என்கிறாள். எஜமானியின் குழந்தையை எடுத்து 'என் கண்ணே' என்று சீராட்டுகிறாள். 'என் கோபாலன் ரொம்ப துஷ்டன்' 'என் கோபாலனுக்கு, பாவம், அதிக பசி' என்றெல்லாம் குழந்தையைக் கொஞ்சிப் பேசுகிறாள். பேசும்போது கோபாலன் எஜமானியின் குழந்தை, தன் குழந்தையல்ல, தன் குழந்தை தன் ஊரில் பாட்டியிடம் இருக்கிறது என்பதை அவள் மறக்கவில்லை! அப்படியே, என் இல்லற சீடர்களே! நீங்களும் வேலைக்காரி பாவத்தில் இல்லறத்தை நடத்துங்கள்.”

• • •

உங்கள் இல்லம் ஆண்டவன் வீடு, அதன் எஜமானன் ஆண்டவன் என்கிற பாவத்தை வழக்கப்படுத்திக் கொண்டு இல்லறத்தை நடத்துங்கள். வழக்கம் பலப்பட்டதும் அதுவே மனதின் பான்மையாகி விடுகிறது. குடும்ப வாழ்க்கை நடத்திக் கொண்டே பகவானையடைய முயற்சி செய்யும் மக்கள் கோட்டைக்குள் சுவருக்குப் பின்னால் நின்று சண்டை செய்யும் சிப்பாய்களைப் போன்றவர்கள். துறவு பூண்டு ஆண்டவனை வழிபடுகிறவர்கள் மைதானத்தில் நின்று யுத்தம் செய்யும் வீரர்களைப் போன்றவர்கள். இரு பாலாரும் வீரர்களே. கோட்டைக்குள்ளிருந்து ஊரைக் காக்கும் சிப்பாய்கள் சௌகரியங்களைப் பயன்படுத்திக் கொண்டு போர் நடத்துகிறார்கள். அதில் ஒரு குற்றமுமில்லை.

## டிராம் "பாஸ்"



இன்ஸ்பெக்டர்:—என்ன தம்பி! நீயும் "பாஸா!"

பையன்:—இல்லை, பெயில்!

---

டிக்஡ன்:—இரண்டும் தான் என்று சொல்வதில் தவறு அதிகமாயிராது.

விடாக்கண்டர்:—காஷ்மீர் பிரச்னை சீக்கிரமாகத் தீருமா? அல்லது ரொம்ப காலம் இழுத்துக் கொண்டிருக்குமா?

டிக்஡ன்:—சில அம்சங்கள் சீக்கிரமாகவும் சில அம்சங்கள் மெதுவாகவும் தீரக் கூடும் என்று எதிர்பார்க்கலாம். நான் சொல்லுவது சிக்கலில்லாமல் தெளிவாகத்தானே இருக்கிறது?

விடாக்கண்டர்:— காஷ்மீர் பிரச்னையில் யார் கட்சியில் நியாயம் இருப்பதாக உங்களுக்குத் தோன்றுகிறது?

டிக்஡ன்:—கராச்சியிலிருந்து பார்த்தால் பாகிஸ்தான் கட்சியிலும் டெல்லியிலிருந்து பார்த்தால் இந்தியா கட்சியிலும் நியாயம் இருப்பதாகத் தெரிகிறது.

விடாக்கண்டர்:—காஷ்மீர் மலையுச்சியிலிருந்து பார்த்தால்?

டிக்஡ன்:—பாகிஸ்தான் கட்சியில் பாதி நியாயமும், இந்தியாவின் கட்சியில் பாதி நியாயமும் இருப்பதாகத் தோன்றினாலும் தோன்றக் கூடும்.

விடாக்கண்டர்:—அப்படியானால் நீங்கள் எப்படி ஒரு முடிவுக்கு வருவீர்கள்?

டிக்஡ன்:—மத்தியஸ்தத்துக்கு ஆரம்பம் செய்தாகி விட்டது. எப்பொழுது ஆரம்பம் உண்டோ, அப்பொழுது முடிவும் உண்டு அல்லவா? ஆகையால் அதைரியப்பட வேண்டியதில்லை என்று நான் சொல்வதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களென்று தைரியமாக நம்புகிறேன்.

விடாக்கண்டர்:—முடிவு காண்பதற்கு இன்னும் எத்தனை நாளாகும்?

டிக்஡ன்:—ஐம்பது வருஷம் வரை ஆனாலும் ஆகும். அல்லது 'டப்' பென்று முடிந்தாலும் முடியலாம்.

விடாக்கண்டர்:—உங்களுக்கு இப்பொழுதே அறுபது வயதாகி விட்டதே!

டிக்஡ன்:—என் முடிவைப் பற்றிச் சொல்லவில்லை, ஐயா! காஷ்மீர் பிரச்னையின் முடிவைப்பற்றி அல்லவா சொன்னதாகக் கருதுகிறேன்.

விடாக்கண்டர்:—உங்கள் மத்தியஸ்த யோசனையை இரு சர்க்கார்களும் ஒப்புக் கொள்வார்களென்று நினைக்கிறீர்களா?

டிக்஡ன்:—அப்படி நினைக்காவிட்டால் நான் இவ்வளவு தூரத்திலிருந்து வந்திருப்பேனா? அல்லது என்னைத்தான் அனுப்பி யிருப்பார்களா என்பதை நீங்கள் கொஞ்சமும் யோசித்துப் பார்க்கவில்லை போலும்!

விடாக்கண்டர்:—உங்கள் யோசனையை ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன செய்யப் போகிறீர்கள்?

டிக்஡ன்:—என்ன செய்வேன் என்று கேட்பதைக் காட்டிலும் என்ன செய்யாமலிருப்பேன் என்று கேட்டால் அதிகப் பொருத்தமாயிருக்கும்.

விடாக்கண்டர்:—என்ன செய்யாமலிருக்கப் போகிறீர்கள்?

டிக்஡ன்:—என்ன செய்யாமலிருப்பேன் என்பதை இப்போது நான் தெரிவிக்க முடியாமலிருக்கிறேன்.

விடாக்கண்டர்:—உங்கள் உதவியில்லாமலே பாகிஸ்தான் சர்க்காரும் இந்திய சர்க்காரும் காஷ்மீர் பிரச்னையைத் தீர்த்துக் கொண்டு விட்டால் அப்பொழுது நீங்கள் என்ன செய்வீர்கள்?

டிக்஡ன்:—நான் சந்தோஷப்பட மாட்டேன் என்று சொல்லத் தயாராக இல்லை என்பதை நான் தெரிவித்துக் கொண்டால் நீங்கள் வருத்தப்பட மாட்டீர்களே?

விடாக்கண்டர்:—உங்கள் ராஜதந்திர பாஷைக்காற்று இந்தியா—பாகிஸ்தான் பிரதிநிதிகள் மீது பட்டு இன்னும் நிலைமை குழப்பமாகி விட்டால்?

டிக்஡ன்:—மேலும் மேலும் எத்தனை சிக்கல்களும் குழப்பங்களும் ஏற்பட்டாலும் மேலும் மேலும் மத்தியஸ்தம் செய்து வைக்கவே என்னை நியமித்திருக்கிறார்கள் என்று தங்களுக்கு நான் எடுத்துக் காட்டினால், அதை நீங்கள் ஒப்புக் கொள்ளாமலிருக்க மாட்டீர்களென்று...

விடாக்கண்டர்:—டிக்஡ன் ஸார்! கொஞ்சம் இருங்கள்!...

(விடாக்கண்டர் பிடித்த ஓட்டம் நமது காரியாலயத்தில் வந்துதான் நின்றார்.)

தங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதி விடுகிறார். மேலும் கட்சி அபேட்சகர்கள் அந்தந்த சமயத்தில் முக்கியமாக நிலவும் பிரச்னையைப் பற்றிப் பேசுவதற்கான குறிப்புகளையும் எழுதி அனுப்புகிறார்.

தொழிற் கட்சிக் காரியதரிசியான பிலிப்ஸ் சுரங்கத் தொழிலாளியாயிருந்து ஏழைகளின் கஷ்டங்களை அறிந்து படிப் படியாகக் கட்சி ஸ்தாபனத்தின் முன்னணிக்கு வந்திருக்கிறார்.

அவர் தினம் காலையில் 9-30 மணிக்குக் காரியாலயத்திற்குப் போவார். அங்கு அவருடைய தினசரி வேலைகள் பத்திரிகைகள் படித்தல், தபால்களைக் கவனித்துப் பதில் எழுதுதல், சகாக்களுடன் முக்கியமான பிரச்னையைப் பற்றிக் கலந்தாலோசித்தல், தம்மைப் பார்க்க வருபவர்களுக்குப் பேட்டியளித்தல், அன்னிய நாட்டு சோஷலிஸ்ட் தலைவர்களுக்குக் கடிதங்கள் எழுதுதல் முதலியன. மேற்படி வேலைகளை முடித்து விட்டு அவர் வீட்டிற்கு வரும்போது இரவு 10 மணியாகிவிடும். அப்படி வந்தாலும் பத்திரிகைக்காரர்களின் 'டெலிபோன்' கேள்விகளுக்கு அவர் பதில் சொல்ல வேண்டும். இதற்காகத் தமது படுக்கையின் அருகிலேயே அவர் 'டெலிபோன்' வைத்திருக்கிறார்.

இவருடைய மனைவியும் தொழிற் கட்சியைச் சேர்ந்தவர்தான். எனினும் தன் கணவன் தன்னுடன் அளவளாவ அவகாசமே கிடைக்கவில்லை என்பதைக் கட்டிக் காட்டுவதற்கு, "நீங்கள் இவ்வாறு பொழுதை யெல்லாம் பொது விஷயங்களிலேயே செலவிட்டு வந்தால் 'அரசியல் விதவைகளின் டிரேட் யூனியன்' என்று ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பிப்பது தவிர எனக்கு வேறு வழியில்லை" என்று கூறினாராம்!

தொழிற்கட்சி விதிப்படி அதன் காரியதரிசி பார்லிமெண்ட் அங்கத்தினராயிருக்கலாகாது. ஆனால் இது பற்றி பிலிப்ஸ் கவலைப்படவில்லை. "என் வேலையே எனக்குச் சரியாயிருக்கிறது. இதோடு பார்லிமெண்ட் மெம்பர் பதவி வகிப்பது நடக்காத காரியம்" என்கிறார்.

நம் நாட்டில் காங்கிரஸ் ஸ்தாபனம் இவ்வாறு எப்போது அமையும்?

["டில்லியில் இந்திய அதிகாரிகளைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தீர்களே, அதிலிருந்து சீக்கிரமாக காஷ்மீர் பிரச்னை தீரும் என்று தோன்றுகிறதா?" என்று கராச்சியில் பாகிஸ்தான் பத்திரிகை நிருபர்கள், காஷ்மீர் மத்தியஸ்தர் ஓவன் டிக்ஸனைக் கேட்டார்கள். "காஷ்மீர் பிரச்னை ஏன் சுமுகமாகத் தீரக்கூடாது என்பதற்குக் குறைவான காரணங்களைத்தான் அங்கே பார்த்தேன்" என்று சுற்றி வளைத்துக் கொண்டு பதிலளித்தார் டிக்ஸன். இப்படிப் பேசுவதுதான் ராஜதந்திர பாஷை. இதே பாஷையில் நமது விடாக்கண்ட நிருபருக்கும் டிக்ஸனுக்கும் பின்வரும் பேட்டி நடந்ததில் ஆச்சரியமில்லை.]

# ராஜதந்திர பாஷை

[ நமது விசேஷ விடாக்கண்ட நிருபர் ]

விடாக்கண்டர் :—டிக்ஸன் ஸார்! உங்களைப் பேட்டி காணுவதில் எனக்கு மிகவும் சந்தோஷம் என்று நான் சொன்னால் நம்புவீர்கள் என்று நம்புகிறேன்.

டிக்ஸன் :—உங்களுடைய சந்தோஷத்தில் நானும் பங்கிட்டுக் கொள்வதில் உங்களுக்கு ஆட்சேபணை இராது என்று நான் நினைப்பதில் தவறில்லையல்லவா?

விடாக்கண்டர் :—டிக்ஸன் ஸார்! பங்கிடும் யோசனை நம் சந்தோஷத்தோடு நிற்குமா? அல்லது காஷ்மீர் விவகாரத்திலும் தலையிடுமோ?

டிக்ஸன் (பரபரப்படைந்தவராய்):—உஷ்! அதைப் பற்றி மட்டும் அதிகமாகக் கேட்கக் கூடாதென்று நான் தங்களைக் கேட்டுக் கொள்வதை நீங்கள் வித்தியாசமாக நினைக்கக்கூடாது...

விடாக்கண்டர் :—இருக்கட்டும். பாகிஸ்தான் அதிகாரிகளுடன் நீங்கள் பேசிக் கொண்டிருந்த வரையில், அவர்கள் யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்வார்களென்று நினைக்கிறீர்களா?

டிக்ஸன் :—அயோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்வார்களென்று நான் நினைக்கவில்லையென்று நிச்சயமாகச் சொல்ல விரும்புகிறேன்.

விடாக்கண்டர் :—காஷ்மீர் பிரச்னை மிகக் கஷ்டமான பிரச்னையா? அல்லது ரொம்பவும் சுலபமான பிரச்னையா?

# தேர்தல் யந்திரம்

ரா. நா.

பிரிட்டனில் ஓர் அரசியல் பொதுக் கூட்டத்தில் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார். அந்தக் கூட்டத்தில் ஸ்திரீகளும் இருந்தனர். அந்த ஸ்திரீகளில் வயதான ஒருத்தி தன் அருகிலிருந்த பெண்ணைப் பார்த்து "இந்த ஆசாமி ரொம்ப அழகாகப் பேசுகிறார் அல்லவா?" என்று கேட்டாள். அந்தப் பெண் முகம் சிவந்தது. ஏனெனில் அவள் பேசிக் கொண்டிருந்தவரின் மனைவி. தனது பாராட்டுதலுக்குப் பதில் வராமல் போகவே, கிழவி "இவர் பள்ளிக்கூட வாத்தியாரா யிருக்க வேண்டும். அதனால்தான் இவ்வளவு நன்றாகப் பேசுகிறார்" என்றாள். உடனே முகம் சிவந்த பெண் பெருமையுடன், "அவர்தான் பிலிட்ஸ் என்பவர். தொழிற் கட்சியின் காரியதரிசி" என்று பதில் கூறினாள். உடனே கிழவி கேலிச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு "அம்மா, எனக்கு இதுகூடத் தெரியாதென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அவர் காலட்சேபத்திற்கு என்ன செய்கிறார் என்றல்லவா கேட்டேன்" என்று கூறிவிட்டு மறுபடியும் நகைத்தாள்.

பாவம், அந்த அம்மாளுக்குத் தொழிற் கட்சியின் காரியதரிசிக்கு வருஷம் 1,350 பவுன் — அதாவது மாதத்திற்கு சுமார் 1,500 ரூபாய் சம்பளம் என்பது தெரியாது. இந்தப் பதவி தொழிற் கட்சியினர் தேர்ந்தெடுத்ததன் மூலம் அவருக்குக் கிடைத்தது.

இந்தியாவில் ஒரு மாகாணத்திற்குச் சமம் பிரிட்டனின் விஸ்தீரணமும் ஜனத்தொகையும். அங்கே தொழிற் கட்சியின் ஸ்தாபனம் எப்படி வேலை செய்கிறது என்பதை அறிந்து கொள்வது காங்கிரஸ்காரர்களுக்கு நல்ல பயன் தரும்.

தொழிற் கட்சியின் காரியாலயம் "டிரான்ஸ்போர்ட் ஹவுஸ்" என்னும் ஏழடுக்கு மாடி வீட்டில் அமைந்திருக்கிறது. இதில் ஒவ்வொரு மாடியிலும் பல பகுதிகளாக முப்பத்தாறு பகுதிகள் வேலை செய்கின்றன.

இந்தத் தலைமைக் காரியாலயத்தில் தொழிற் கட்சியின் காரியதரிசிக்கு உதவி புரிய எண்பது பேர் மாதச் சம்பளம் பெற்று வேலை செய்கிறார்கள். நாட்டில் ஒவ்வொரு பகுதியிலுமுள்ள கிளைக் காரியாலயம் ஒவ்வொன்றிலும் முப்பது பேர் மாதச் சம்பளத்திற்கு வேலை செய்கிறார்கள். இதைத் தவிர, கட்சி ஏஜண்டுகள் இருநூற்று நாற்பது பேர் இருக்கிறார்கள். கட்சி அங்கத்தினர்களில் லட்சம் பேர் தேர்தல் காலத்தில் இலவசமாக வேலை செய்கிறார்கள்.

தொழிற் கட்சியில் சுமார் 60 லட்சம் அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். பொதுத் தேர்தல் முடிந்தாலும் அடுத்த தேர்தல் சமீபத்தில் வந்து விடலாம் எனும் எண்ணத்தில் தேர்தல் யந்திரத்தை எண்ணெய் போட்டு, சந்தடி செய்யாமல் வேலைசெய்யும் ஸ்திதியில் வைத்திருப்பது காரியதரிசியின் பொறுப்பு.

இந்தப் பொறுப்பை அவர் எப்படி நிறைவேற்றுகிறார் என்பது சுவாரஸ்யமான விஷயம். கட்சித் தொண்டர்களுக்குப் பயிற்சியளிக்கக் கோடை வகுப்புகள் ஆங்காங்கு நடத்துகிறார். வாரா வாரம் இரண்டு நாள் தொண்டர்களுக்குத் தேர்தல் வேலையில் பயிற்சியளிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த வேலை வருஷம் முழுவதும் ஓயாமல் நாடெங்கும் நடந்து கொண்டிருக்கிறது.

சென்ற தேர்தலுக்கு முன் தொழிற் கட்சிக் காரியதரிசி கிளைக் காரியாலயங்களுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பினார்:

"மிகுந்த பயன் தரும் முறையில் பொதுக் கூட்டங்கள் நடத்துங்கள். முதலில் தெருவிலே கூட்டங்கள் போடுங்கள். அந்தக் கூட்டங்களில் உங்கள் ஊரிலே உள்ள பிரசங்க மண்டபத்தில் கடைசியாக நடக்கப் போகும் கூட்டத்தைப் பற்றிப் பிரசாரம் செய்யுங்கள். உங்கள் கூட்டங்களுக்கு டாக்டர்கள், நர்ஸ்கள், உபாத்தியாயர்கள், உத்தியோகஸ்தர்கள் முதலிய எல்லோரும் வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். இவர்கள் யாவருடைய ஆதரவும் சோஷலிஸம் தழைப்பதற்குத் தேவை."

இந்த ஸ்தாபனத்தில் விஷய ஞானப் பகுதி ஒன்று இருக்கிறது. அதன் தலைவருடைய வேலை சந்தேக நிவர்த்தி கோரும் கடிதங்களுக்குப் பதில் எழுத வேண்டியது. தினம் தினம் கட்சி அபேட்சகர்கள், கட்சித் தொண்டர்கள், வோட்டர்கள் முதலியவர்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் வருகின்றன. இவைகளுக்கெல்லாம் இந்தப் பகுதித் தலைவர்தான் பதில் எழுதவேண்டும். இவருக்கு வரும் கடி

வருகிறது? பாட்டு வாத்தியார், பள்ளி ஆசிரியர், மாணவன், எழுத்தாளன், மனைவி, கணவன் மற்றும் சமூகத்திலுள்ள ஒவ்வொரு தனி மனிதரைபபற்றியும் எவ்வளவு ஹாஸ்யங்கள் வருகின்றன! அவர்கள் ஒவ்வொருவரும் பத்திரிகைக்காரர்கள் தங்களை அவமானப் படுத்துகிறார்கள் என்று எண்ணிக் கோபித்துக் கொள்ள முடியுமா?

பத்திரிகைகளில் வெளியாகும் "அக்கப் போர்" போன்ற ஹாஸ்யப் பகுதிகளை நேயர்கள் நன்கு உணர்ந்துகொள்ள வேண்டும். அதற்காகவே இந்தக் கடிதம் எழுத முன் வந்தேன். ஒரு விஷயத்தைச் சரியானபடி புரிந்து கொள்ளாததில் எவ்வளவு விபரீதம் உண்டாகிறது என்பதற்கு இந்த இன்ஷூரன்ஸ் ஏஜண்டு—நாய்—துணுக்கே மிகப் பெரிய உதாரணமாகும்.

பெரம்பூர், சென்னை
3—6—50 நா. பாலசுப்ரமண்யம்

○●○

## சும்மா விட்டால் போதும்!

நான் பெரம்பூரில் ஒரு சிறு காப்பி ஹோட்டல் நடத்தி வருகிறேன். என் கடைக்கு வாரத்தில் 3½ படி பொடி அரிசி (Broken rice)யும் 1¾ படி கோதுமையும் கொடுக்கின்றனர். வார விடுமுறை நாள் ஒன்றுபோக, மீதி 6 நாட்களுக்கு 3½ படி பொடி அரிசி. அதாவது நாளொன்றுக்கு 5 ஆழாக்கு. இதில் கல், மண், களிமண் உருண்டைகள் போக, தேறுவது 2 அல்லது 3 ஆழாக்கு. கோதுமையைத் தினசரி மாவு மில்லில் அரைத்துச் செலவு செய்யவேண்டும். மொத்தமாக அரைத்து அதிகாரிகளிடம் 'ஸ்டாக்' (Stock) காண்பிக்கக் கூடாதாம். இதனால் என்னைப் போன்ற சிறு வியாபாரிகளுக்கு மிகுந்த கஷ்டம்.

இந்த வாரம் ரேஷன் சாமான்கள் வாங்குவதற்காகக் கடைக்குப் போனபோது 8 படி ரவை (Semolina) கட்டாயமாக வாங்கினால் தான் ஒரு படி பொடி அரிசி கொடுக்க உத்தரவு எனக் கூறினார்கள். இந்தக் கட்டாய உத்தரவு ஹோட்டல்காரர்களுக்குத்தான். உபயோகமற்ற பொருள்களை ஹோட்டல் காரர்களிடம் தள்ளுவது என்ற கொள்கையை சர்க்கார் கடைப்பிடிக்கிறார்கள். ஆனால் ஹோட்டல்காரர்களுக்குக் கொடுக்கும் பொருள்களைப் பொது ஜனங்கள்தான் சாப்பிடுகின்றனர் என்பதை சர்க்கார் மறந்து விடுகிறார்கள்.

ஹோட்டல்காரர்களுக்கு சர்க்கார் கொடுக்கும் பொருள்களைக் கண்ணால் கண்டவர்கள் யாரும் தின்ன மாட்டார்கள். இதனால் ஹோட்டல் முதலாளிகள் நல்ல அரிசியைக் கறுப்பு மார்க்கட்டில் வாங்கித்தான் சொந்த உபயோகத்தைச் சரிக்கட்டுகின்றனர். மேலும் தினசரி 2 அல்லது 3 ஆழாக்கில் இட்டிலியோ, தோசையோ செய்ய முடியாது. இதிலிருந்து அரசாங்கத்தின் செயல்களும், சட்டங்களும், ரேஷனுமே கறுப்பு மார்க்கெட்டுக்கு முக்கிய காரணங்களென்று தெரிகிறதல்லவா?

இவற்றை யெல்லாம் நோக்கும்போது, இப்பொழுது கிடைக்கும் பிச்சை ரேஷன் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. நான் எப்படியாவது என் ஹோட்டலைச் சமாளிப்பேன். இந்த அதிகாரிகளின் தொந்தரவுகள் ஒழிந்து விட்டாலே போதும்!

பெரம்பூர்
29—5—50 ஒரு சிறு ஹோட்டல்காரர்

○●○

## மாற வேண்டும்

மே 28 உ. 'கல்கி' 'வட்ட மேஜை'யில் வெளியான 'சில யோசனைகள்' என்ற கடிதத்தில் கூறப்பட்டவற்றுடன் மத்யதர வகுப்புக் குடும்பங்களை நடத்தும் பெண்களும் கீழ்க் கண்ட விஷயத்தைப் பற்றிச் சற்று யோசிப்பது நலம்.

கிறிஸ்தவக் குடும்பங்களில்தான், ஆண், பெண் இருவரும் (படித்தவராய் இருந்தால்) குடும்ப வருவாய்க்காக உழைப்பதைப் பார்க்கிறோம். அதில் அவர்களுக்குக் கௌரவக் குறைவு ஒன்றுமில்லை. கிறிஸ்தவரல்லாத குடும்பங்களில்தான் — ஏழைகளாயினும் — பெண்கள் படித்தவராய் இருப்பினும்—அவர்களது சம்பாதனை விரும்பப்படுவதில்லை. மத்யதர வகுப்பைச் சேர்ந்த குடும்பமாய் இருந்து, கணவனது வருவாயில் கடனின்றிச் செலவு செய்ய முடியவில்லை என்றால், அந் நிலைமையிட அவர்களது மனைவிமார் படிப்பு, பாட்டு, தையல் தெரிந்தவரா யிருந்தால் அவற்றைப் பயன் படுத்திக்கூடிய அளவு வருவாய்க்கு ஏதுவாக்கலாமே!

இந்த விஷயத்தில் மத்யதர வகுப்பு ஆண்களும் போலிக் கௌரவம் பாராட்டக் கூடாது. கௌரவமான எந்த உழைப்பையும் கேலி செய்வது அறியாமை.

இவ்வகையில் ஒற்றுமையுடன் உழைக்க முன் வந்தால், படித்த பெண்கள் பலர் மத்தியதர வகுப்பைச் சேர்ந்த தங்கள் குடும்பங்களைக் கூடிய அளவு சந்தோஷ நிலைக்கு உயர்த்த முடியும். இதில் தவறென்ன? காலநிலைக் கேற்றவாறு சமூக மனப்பான்மை மாறினால்தான் நாமும் நமது சமூகமும் முன்னேற வழியுண்டாகும்.

ஈரோடு
30—5—50 ஜி. சகுந்தலா

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "பஞ்ச நிவாரணக் கடன்" என்ற கடிதம் எழுதிய மேல் பாப்பாம்பாடி, விவசாயிக்கும், "மகத்தான திட்டம்" என்ற கடிதம் எழுதிய பெரம்பூர் ஸ்ரீ நா. பாலசுப்பிரமணியத்துக்கும், ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

(கணக்கப்பிள்ளை) அவர்களைக் கண்டு பஞ்ச நிவாரணக் கடனைப் பற்றிக் கேட்டேன். அதற்குக் கர்ணம் "இருபது ரூபாய் இருந்தால் கடன் வாங்கிவிடலாம்" என்றார். "எதற்காக?" என்று கேட்டேன். "அது சம்பந்தமாக மேலதிகாரிகளுக்கு (ரெவின்யூ இன்ஸ்பெக்டர் முதலியவர்களுக்கு) கொடுத்துதவ வேண்டும். அப்படிக் கொடுத்தால் மூன்றே நாட்களில் கடனைக் கட்டாயம் வாங்கி விடலாம். இல்லையென்றால் முடியாது" என்று சொல்லி விட்டார். நான் மனக்கலக்கத்துடன் வீடு வந்து சேர்ந்தேன். முதலில் இருபது ரூபாய்க்கு வழி தேடிய பின்னர்தான் மற்றவற்றைப் பற்றி நான் யோசிக்கவேண்டும்.

கிணறு வெட்டும் மான்யத்தை எப்படி சௌகரியம் உள்ளவர்களே அடைகிறார்களோ, அப்படியே "மாடு வாங்கப் பணம்" என்று சர்க்கார் கொடுக்கும் பணத்தையும் வசதி உள்ளவர்களே அடைகிறார்கள். இத்தனைக்கும் அவர்கள் மாடு கூட வாங்காமல் மேற் பார்வையாளர்கள் வரும்போது வேறொருவரின் மாட்டைக் கொண்டு வந்து காட்டி விடுகிறார்கள். எப்படியோ எல்லாம் சுமுகமாகவே நடைபெற்று விடுகிறது. அவ்வாறே இந்தப் பஞ்ச நிவாரணக் கடனும் பணம் படைத்தவர்களுக்குத்தான் பயன்படுகிறது. இம்மாதிரி சர்க்கார் என்ன திட்டங்கள் கொண்டு வந்தாலும் பெரும்பாலான ஏழை விவசாயிகளுக்கு அவை நடைமுறையில் பயன்படுவதேயில்லை. இதற்குக் காரணமாயிருக்கும் நாகர்களின் மனம் என்றுதான் மாறுமோ?

இந்த விஷயத்தில் சர்க்கார் உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுத்து, பணம் பாழாகும் படலத்தை நிறுத்தி, பணம் பலனடையும் திட்டத்தை உருவாக்க வேண்டும்.

மேல் பாப்பாம்பாடி
22—5—50 ஒரு விவசாயி

○●○

## நான்காவது தமிழ் விழா

கோவையில் நடந்த தமிழ்த் திருவிழாவுக்கு நேரில் சென்று விழாவில் பங்குபெற முடியா விட்டாலும் ரேடியோ அஞ்சல் மூலம் விழா நிகழ்ச்சிகளைக் கேட்டு இன்புற்ற இலங்கைத் தமிழர் பலரில் நானும் ஒருவன். விழாவின் கடைசி நாளன்று இலங்கையில் இருந்து சென்ற பிரதிநிதிகள் அடுத்த வருட விழாவை யாழ்ப்பாணத்தில் நடத்த வேண்டுமென்பதாக விண்ணப்பித்துக் கொண்டார்கள். இவ்விண்ணப்பத்தை விழா நிர்வாகிகள் தட்டிக் கழிக்க முடியாது.

கலை, நாகரிகம், பண்பாடு இவற்றினால் அதிகத் தொடர்பு கொண்ட இலங்கைத் தமிழர்கள் இதனை விரும்பி வரவேற்பார்கள் என்பதில் ஐயம் இல்லை. புதிதாகச் சுதந்திரமடைந்த இலங்கை, தமிழையும் தமிழ்க் கலையையும் வளர்ப்பதில் இன்னமும் திருப்திகரமான அளவிற்கு முன்னேறவில்லை. இந்நிலையில் தமிழ் விழாவை யாழ்ப்பாணத்தில் நடத்தினால் பொதுவாக இலங்கைத் தமிழருக்கும் குறிப்பாக யாழ்ப்பாணத்தவருக்குப் புது உற்சாகமும், தமிழ்ப் பற்றும், கலைப்பற்றும் ஏற்பட ஏதுவாகும்.

தமிழ் விழாவை யாழ்ப்பாணத்தில் நடத்துவதின் மூலம் தென்னிந்தியத் தமிழருக்கும் இலங்கைத் தமிழருக்கும் சௌஜன்யமான உறவு ஏற்படுவது மட்டுமல்லாமல், 'தமிழ் நாட்டவர் தாங்களே எவ்வழிகளிலும் முன்னேறுகிறார்களேயன்றி இலங்கைத் தமிழர்களாகிய எங்களைக் கவனிக்கவில்லை' என்று யாழ்ப்பாணத்தவர் குறை கூறுவதற்கும் ஏது இல்லாமற் போகும்.

அகலவத்தை, இலங்கை
26—5—50 செ. நடராசா

○●○

## ★ மகத்தான திட்டம்

சென்ற வாரம் வெளியான 'அமெரிக்காவைப் பின்பற்றுங்கள்' என்ற தலைப்புள்ள கடிதத்தைப் பற்றிய என் கருத்துக்களை வெளியிட விரும்புகிறேன்.

இன்ஷூரன்ஸ் திட்டம் மகத்தான திட்டம்; நாட்டின் தன்மைக்கேற்ற திட்டம்; தனி மனிதரின் வாழ்வை விளங்கச் செய்யும் சக்தி பெற்ற அமோகமான சேமிப்புத் திட்டம். இதை யாருமே மறுக்கவில்லை;—மறுக்க முடியாது.

ஆனால் அத்தியாவசியமான தேவைகளுக்கே பணம் போதாமல் திணறும்போது சேமிப்பைப் பற்றி எப்படி நினைப்பது? 'கல்யாணமானால்தான் பைத்தியம் தெளியும்; பைத்தியம் தெளிந்தால்தான் கலியாணமாகும்' என்பது போல, 'சேமிப்புத் திட்டத்தால்தான் வாழ்க்கைத் தரம் உயரும்; வாழ்க்கைத் தரம் உயர்ந்தால்தான் சேமிப்புத் திட்டம் சாத்தியம்' என்பதும் தீர்க்க முடியாத—ஒன்றையொன்று ஒட்டி நிற்கிற விஷயமாகும். நிற்க.

ஹாஸ்யம் என்பது ஒரு நுண்ணிய உணர்ச்சி. அதைப் புரிந்து கொள்வதே ஒரு தனிக் கலை.

பத்திரிகைகளில் தலைவர்களைப் பற்றி எவ்வளவோ கேலிச் சித்திரங்கள் வருகின்றன. அவையெல்லாம் தங்களை அவமானப்படுத்துவதற்காகவே போடப்பட்டவை என்று அர்த்தம் கற்பித்துக்கொண்டு தலைவர்கள் கோபித்துக் கொண்டால் அதுவே ஒரு வேடிக்கையாகிவிடும் அல்லவா?

மேலும் இன்ஷூரன்ஸ் ஏஜண்டுகளைப் பற்றி மாத்திரமா பத்திரிகைகளில் ஹாஸ்யம்

“தொழில்களில் உள்ள சிரமங்களைப்பற்றி ஆராயும்போது முதலாளிகள், தொழிலாளிகள்—ஆகிய இரு சாராருடைய நலன்களைப் பற்றித்தான் நாம் கவலைப்படுகிறோம். மூன்றாவது சாராரான பொது ஜனங்களைப் பற்றி யார் கவலைப்படுவது?”

—ஸ்ரீ ஹரிகிருஷ்ண மஹதாப்.

நீங்கள்தான் இப்போது வந்திருக்கிறீர்களே?

★

‘அசோகா’, ‘சாந்தி’ என்ற யானைக் குட்டிகளை அமெரிக்காவுக்கு அழைத்துச் சென்ற பாபாஜான் என்னும் இளம் யானைப் பாகன் பம்பாய்க்குத் திரும்பி வந்து விட்டான். அமெரிக்காவில் பாபாஜானுக்கு எங்கு சென்றாலும் வரவேற்புக்களும் உபசாரங்களும் தடபுடலாக இருந்ததாம். ஆனால் தாய் நாட்டுக்குத் திரும்பி வந்த போது அவனை வரவேற்க ஒருவர்கூடத் துறைமுகத்தில் இல்லையாம். இதைக் கண்டு அவனுக்கு ரொம்பவும் ஏமாற்றமாகி விட்டதாம்.

“யானைக்கு ஒரு காலம் வந்தால் யானைப் பாகனுக்கு ஒரு காலம் வராமலா போகும்?” என்று பாபாஜான் மனதைத் தேற்றிக் கொள்வாராக!

★

“இன்று பொருளாதாரத் துறையில் ஸ்திரீகள் இரண்டாவது ஸ்தானத்தையே வகிக்கிறார்கள்.”

—ஒரு ஸ்திரீ புரொபஸர்.

“நீங்கள் சொல்வது ரொம்ப சரி; முதலில் நான்தான் சம்பளம் வாங்குகிறேன். இரண்டாவதாகத்தான் அவள் என்னிடமிருந்து சம்பளத் தொகையைப் பெற்றுக் கொள்கிறாள்” என்கிறார் ஒரு கிரஹஸ்தர்.

# வட்ட மேஜை

## உள்ளத் துடிப்பு

நமது பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு 31–5–50 அன்று எங்கள் நகருக்கு வரப்போகிறார் என்ற செய்தியை ஒரு மாதத்துக்கு முன்னதாகவே அறிந்த என் உள்ளம் ‘அந்த நாள் என்று வருமோ?’ என்று ஏங்கிக் கொண்டிருந்தது. தலைவர்களின் ஆணைப்படி சுதந்திரத் தீயில் குதித்து “வெள்ளையனே வெளியே போ! பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு ஜே!” என்று முழக்க மிட்ட மாணவர்களுள் நானும் ஒருவன். அப்பொழுது நேரு எப்படி இருப்பார் என்றோ, அவர் எப்படிப் பேசுவார் என்றோ எனக்குத் தெரியாது. அவரை நேரில் பார்க்காவிட்டாலும் அவரை நினைத்தவுடனேயே என் மனம் புளகாங்கிதமடையும். அப்படியிருக்க அவர் எங்கள் நகருக்கு — திருவனந்தபுரத்துக்கு வருகிறார் என்று அறிந்தபோது நான் அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது.

நான் காத்திருந்தபடி எங்கள் திருவனந்தபுரத்துக்கு நேருவும் வந்து விட்டார். ஆனால், காலத்தின் கோலத்தால் பசிக் கொடுமையைத் தணிக்கும் பொருட்டு வர்த்தக ஸ்தாபனமொன்றில் குமஸ்தாவாக வேலை பார்த்து வரும் என் கால்களில் ‘ட்யூட்டி’ என்ற விலங்கு பூட்டப்பட்டது. என் செய்வேன்?

என் போன்ற இளைஞர்கள் நேருவைப் பார்த்துவிட்டு வந்து, “ஆகா! நேரு எப்படியிருக்கிறார், தெரியுமா? அவர் முகத்தில் அறிவின் சுடர் பிரகாசிக்கிறதே; அவர் மக்களைப் பார்த்து நகை முகத்துடன் கைகூப்பி வணக்கம் செய்வதைப் பார்த்தால் சிறு குழந்தை கூட மலர்ந்த முகத்துடன் திறந்த வாய் திறந்தபடி நிற்கிறதே!” என்றெல்லாம் என்னிடம் வந்து கூறும்போது என் மனம் எப்படி இருக்கும்?

என்னைப்போல் எத்தனை இளைஞர்கள் அன்று ‘டியூட்டி’ என்ற விலங்கு பூட்டப் பட்டுக் கிடந்தனரோ!

திருவனந்தபுரம்
2—6—50

செல்வம்

○●○

## ★ பஞ்ச நிவாரணக் கடன்

நான் ஓர் ஏழை விவசாயி; எனக்கு நன்செய் நிலம் சுமார் ஒரு காணியும், புன்செய் நிலம் இரண்டு காணிகளும் இருக்கின்றன. “பூமி திருத்தி உண்” என்னும் முதுமொழிக்கிணங்க, கூடிய மட்டும் உழைத்து வருகிறேன். ஆனால் சுமார் மூன்று வருஷங்களாக இப்பிரதேசத்தில் பருவ மழை பெய்யவில்லை. பாடு பட்டு உழைத்து உருவாக்கிய பயிர்கள் பதிருணமாகி விட்டன. கால் வயிற்றுக் கஞ்சிக்குக்கூடக் கால் படி நெல் விளையவில்லை.

இது சமயம் விவசாயிக்கு “பஞ்ச நிவாரணக் கடன்” கொடுத்து உதவப் போவதாக சர்க்கார் தெரிவித்தார்கள். இப்பொழுது எங்கள் தாலுக்காவில் தாசில்தார் மூலமாகக் கடன் கொடுத்தும் வருகிறார்கள். நானும் ஆர்வத்துடன் எங்கள் கர்ணம்

# அக்கப் போர்

"மந்திரி பதவி கேட்பவர்களுக்கு நேருஜியின் சாட்டை!" —பத்திரிகைத் தலைப்பு.

"எத்தனை அடி வாங்கிக் கொண்டால் மந்திரி பதவி கொடுப்பீர்கள்?" என்று கேட்கிறார் மிஸ்டர் பதவி மோகம்.

★

"கல்யாணி, ஸ்வர்ணமுகி ஆறுகள் கூடுமிடத்திலிருந்து தண்ணீர் கொண்டுவந்து திருப்பதிக்குக் குடி தண்ணீர் சப்ளை செய்வதற்காக நகர சபை போட்டிருக்கும் திட்டத்தைத் தொடர்ந்து நடத்த சென்னை சர்க்கார் முடிவு செய்திருக்கிறார்கள்."

—திருப்பதி செய்தி.

திருப்பதி வாசிகளுக்கு இது திருப்தி அளிக்கும் செய்திதான்!

★

பஸ் போக்குவரத்தைச் சென்னை சர்க்கார் ஏற்று நடத்த ஆரம்பித்ததிலிருந்து அவர்கள் போதிய அனுபவம் அடைந்து விட்டதாக நிதிமந்திரி கனம் கோபால் ரெட்டி திருச்சியில் ஒரு கூட்டத்தில் கூறியிருக்கிறார்.

சர்க்கார் மாத்திரமா போதிய அனுபவம் அடைந்து விட்டார்கள்? பொது ஜனங்களும் கூடத்தான்!

★

"அஸ்ஸாம் மாகாணத்தில் உள்ள மர்கெரிட்டா என்னுமிடத்தில் கணவனுக்கும் மனைவிக்கும் சச்சரவு ஏற்பட்டதாம். அதன் காரணமாகக் கணவன் ஓடையில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ள முயன்றானாம். ஆனால் அவனுடைய மனைவி அவனுடைய குடுமியைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்ததன் விளைவாக அவன் காப்பாற்றப் பட்டான்." —பத்திரிகைச் செய்தி.

"உச்சிக் குடுமி ஒழிக!" என்னும் இயக்கம் எவ்வளவு தவறானது என்று இதிலிருந்து தெரிகிறதல்லவா?

★

"வகுப்புக் கலவரத்தினால் பாதிக்கப்பட்டு ஊரை விட்டு ஓடிவந்த அகதிகள் சில பிரதேசங்களில், ஒரு டம்ளர் தண்ணீரை எட்டணா விலை கொடுத்து வாங்க வேண்டியிருந்தது." —ஒரு பிரசங்கி.

அந்தத் தண்ணீருக்குக் காப்பி என்று மட்டும் பெயர் கொடுத்து விற்றிருந்தால் இம்மாதிரி புகாருக்கு இடமிருந்திருக்காது.

கொழும்புவில் நடக்கும் உலக புத்த மகாநாட்டில் ஒரு பாதிரியார், "ஸ்டாலினையும் ட்ருமனையும் புத்த மதத்தில் சேர்த்து விட்டால் யுத்தத்தைத் தடுத்து உலகத்தைக் காப்பாற்றி விடலாம்" என்றார்.

தற்சமயம் உலகத்துக்காக மட்டும் நாம் கவலைப்பட்டு வருகிறோம். மேற்படி பாதிரியாரின் யோசனையை ஸ்டாலினும் ட்ருமனும் ஏற்றுக்கொண்டால் உலகம், புத்த மதம் இரண்டுக்காகவும் நாம் கவலைப்பட வேண்டியிருக்கும்!

★

"சங்கனியில் செய்தி இலாகாவிலிருந்து புஸ்தகங்களையும் பிரசுரங்களையும் திருடர்கள் களவாடிக் கொண்டு போய் விட்டனர்."

—ஒரு செய்தி.

மேற்படி பிரசுரங்களை என்ன செய்வது என்று தவித்துக் கொண்டிருந்த அதிகாரிகளுக்கு இந்தச் செய்தி ஒரு வரப்பிரசாதந்தான்!

★

"ஜப்பானியர்களின் ஆபத்திலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காகச் சீனியர்கள் ஒன்றுபட வேண்டும்" என்று மிஸ்டர் நாராசிங் கூறுகிறார்.

"அது சரி; உங்களிடமிருந்து எங்களைக் காத்துக் கொள்வதற்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று ஒரு சீனியர் மாஸ்டர் நாராசிங்கைக் கேட்கிறார்!

★

இலங்கை ஸ்தல ஸ்தாபன மந்திரியான ஸ்ரீ பண்டார நாயகா, "பிரதம மந்திரி பதவியில் எனக்கு மோகமில்லை. அதற்குப் பதிலாகத் தேச சேவை செய்யவே நான் விரும்புகிறேன்" என்று கூறுகிறார்.

அப்படியானால் இப்பொழுதுள்ள பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகா என்ன சேவை செய்கிறாராம்?

★

"ஆறு வருஷகாலம் நடந்த யுத்தத்துக்குப் பிறகு ஏற்பட்ட ஆயுதப் பஞ்சம் மிகவும் கொடுமையாயிருந்தது. நமது புதிய படைகள் துப்பாக்கிகளுக்குப் பதிலாகத் துடைப்பங்களை வைத்துக்கொண்டு பயிற்சி பெறவேண்டியதாயிற்று" என்று ஒரு பிரிட்டிஷ் பிரமுகர் கூறுகிறார்.

துப்பாக்கி முதலிய ஆயுதங்களைப் பெருக்க வேண்டும் என்பதைத் துடைப்பங்கள் ஞாபக மூட்டியிருக்கும் என்று நம்புகிறோம்.





மேலே :—போரோபுதூர் ஆலயச் சுவர்களில் அற்புத சிற்ப வேலைகளைக் காணலாம்.

கீழே :—பாலித் தீவின் நடனப் பெண்கள் ஆலயத்துக்குச் செல்கிறார்கள்.

# ஜாவாக் காட்சிகள்



மேலே:—ஜாவாத் தீவில் உள்ள பிரம்மாண்டமான போரோபுதூர் ஆலயம். தமிழ் நாட்டுச் சிற்பக் கலையை யொட்டி அமைந்தது.

கீழே:—ஜாவாவை யடுத்த பாலித் தீவில் நடனக் கலை சிறந்து விளங்குகிறது.

யர்கள் வர்ணிக்கிறார்கள். மற்றும் சிலர் "உலகிலேயே ஜாவாவைக் காட்டிலும் இயற்கை அழகு வாய்ந்த இடம் வேறு எதுவுமே இல்லை" என்கிறார்கள். 'புன் முறுவல் பூத்த முகம்' என்று சொல் வதைப்போல ஜாவாவை 'எப்போதும் புன்முறுவல் பூத்த தேசம்' என்று சொல்லலாம் என்று ஒரு சரித்திராசிரி யர் வர்ணித்திருக்கிறார்.

மேற்படி சுவர்க்க பூமியில் ஆதிக்கம் செலுத்தும் விஷயத்திலே பல காடுகளுக் குள்ளும் ஆதி முதல் போட்டா போட்டி பலமாக இருந்து வந்திருக்கிறது.

கீழ்த்திசையிலே, குறிப்பாக இந்தோ னேஷ்யாவிலே பதினோராவது நூற் றுண்டு வரையில் சைலேந்திரர்களின் ஆதிக்கம் இருந்து வந்தது. பிறகு அவர் களுக்கும் சோழர்களுக்கும் ஏற்பட்ட போரில் சோழர்கள் வெற்றியடைந்தனர். எனவே ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் அங்கு சோழர்களின் பூரண ஆதிக்கம் இருந்து வந்தது. மறுபடியும் சைலேந் திரர்கள் படையெடுத்து வெற்றி பெற்ற தால், மூந்நூறு வருஷங்கள் வரையில் அங்கு சைலேந்திர சாம்ராஜ்யமே நிலைத்து நின்றது.

அதற்கு அறிகுறியாக இன்றளவும் அங்குள்ளவர்களின் பெயர்களும் நகரங் களின் பெயர்களும் சம்ஸ்கிருத மயமாக இருக்கின்றன. உதாரணமாக ஜகத் கர்த்தா, சுகர்ணு, சுதர்சனு என்ற பெயர்களைப் பாருங்கள்!

ஜாவாவில் ஆட்சி புரிந்த ஹிந்து மன் னர்களில் அசுவ வர்மன், பூரண வர்மன் —இவர்களுடைய பெயர்கள் இன்றளவும் அங்கு பிரசித்தமாக இருக்கின்றன.

இவ்வாறாக, பதினைந்து நூற்றுண்டுகள் வரையில் இந்தோனேஷ்யப் பிரதேசங் களில் ஹிந்துக்களின் சாம்ராஜ்யமே நிலைத்து நின்றது. அதன் பிறகுதான் அராபியர்கள் படையெடுத்து வந்து இந்தோனேஷ்யா, மலாயா முதலிய பல விடங்களிலும் இருந்த ஹிந்துக்களைக் கூண்டோடு பலாத்காரமாய் முஸ்லிம் களாக மாற்றி விட்டார்கள்.

எனினும் பாலித்தீவில் உள்ளவர்கள் மாத்திரம் இன்றளவும் கலப்பற்ற ஹிந் துக்களாகவே இருந்து வருகிறார்கள். இந்தோனேஷ்யத் தீவுகளுக்குப் பாலி தான் முகப்பு ரத்னம்போல் விளங்குகிறது என்று ஐரோப்பிய சரித்திராசிரியர்களும் யாத்திரீகர்களும் ஒத்துக் கொண்டிருக் கிறார்கள். மரணத்தைக் கண்டு பயப் படாத தேச மக்கள் இந்த உலகில் யாராவது உண்டா? ஆனால், பாலி மக்கள் மரணத்தையும் விழாவாகவும் விருந்தாகவும் கொண்டாடுகிறார்கள்! பாலியில் வழங்கி வரும் உலகப் பிரசித்தி பெற்ற நடனம் அவர்களுடைய வாழ்க் கையின் ஆனந்தத்தைப் பிரதிபலிக்கிறது.

பதினாறாவது நூற்றுண்டில் இந்தோ னேஷ்யாவில் போர்ச்சுகீயர்களின் ஆதிக் கம் ஏற்பட்டது. ஆனால் அவர்களுடைய ஆதிக்கம் ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் நீடிக்கவில்லை. அதன் பின், அங்கிருந்து போர்ச்சுகீயர்களை விரட்டி விட்டு பிரிட்டி ஷாரும் டச்சுக்காரர்களும் தங்கள் ஆதிக் கத்தை ஏற்படுத்தினர். கடைசியாக பிரிட்டிஷாரை விரட்டி விட்டு டச்சுக் காரர்கள் 1602-ம் வருஷம் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்திக் கொண் டார்கள். எனவே சற்றேறக்குறைய மூந்நூற்றைம்பது வருஷ காலம் அடி மைத்தனத்தில் ஆழ்ந்திருந்த இந்தோ னேஷ்யா சென்ற வருஷம்தான் டச்சுக் காரர்களின் ஆதிக்கத்தை ஒழித்து விட்டுச் சுதந்திரம் பெற்றது.





தங்கச் சுரங்கங்களைக் காட்டிலும் அதிகச் செல்வத்தைக் கொடுக்கும் ஆஸ்திரேலியா ஆடுகள்

யுள்ள நூல்களில் இவ்விஷயமாக அதிக விவரங்கள் காணப்படுகின்றன!

பிரிட்டன் "திரை கடலின் மகாராணி" என்று பிரிட்டிஷார் சமீபகாலம் வரையில் பெருமையடித்துக் கொண்டு வந்தார்கள். ஆனால் சோழ மண்டலாதிபதிகளும் சைலேந்திர அல்லது ஸ்ரீ விஜயா சாம்ராஜ்யாதிபதிகளும் கடலில் ஆதிக்கம் செலுத்தி வந்ததாகவும் உலகத்திலுள்ள ஆறு கண்டங்களுடன் வர்த்தகப் போக்கு வரத்து வைத்துக் கொண்டிருந்ததாகவும் பண்டைய சரித்திர வரலாறுகளிலிருந்து தெரிகிறது. அக்காலத்தில் குதிரைகள், யானைகள், நவரத்னங்கள், வாசனைச் சாமான்கள், மருந்துகள் முதலியவற்றைத் தென்னிந்தியர்கள் கப்பல்களில் பல நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து வர்த்தகத் துறையில் உலகத்திலேயே மிகவும் முற்போக்காக இருந்து வந்தார்கள்.

கீழ்த்திசையில் கடற் பாதைகள் எல்லாம் சோழ ராஜ்யத்தின் ஆதிக்கத்தில் இருந்து வந்த காலமும் உண்டு.

எட்டாவது நூற்றாண்டில் கிழக்கேயுள்ள எல்லா நாடுகளிலும் சைலேந்திர சாம்ராஜ்யத்தின் ஆதிக்கம் இருந்ததாகத் தெரிகிறது. அந்த உண்மையை நாம் சரித்திர வாயிலாக அறிவதோடு மாத்திரமின்றி, நிதர்சனமாகவும் காண்கிறோம். அதாவது கிழக்கு ஆசியா நாடுகளில் இந்தியர்களின் மதம், பண்பாடு, பாஷைகள், முதலியன இன்றும் வேரூன்றியிருப்பதைக் காண்கிறோம். இலங்கை, மலாய் நாடு, இந்தோ சீனா, சுமத்ரா, ஜாவா, மதுரா, பாலி, லம்பா, மோலுக்காஸ் தீவுகள், போர்னியோ, ஸெலிபிஸ், பிலிப்பைன் தீவுகள், பார்மோஸா முதலிய நாடுகளிலும் சீனாவில் கூட ஒரு பகுதியிலும் தென்னிந்திய சாம்ராஜ்யம் பரந்து விரிந்து கிடந்தது.

ஹிந்துக்களின் ஆதிக்கம் இருந்து வந்ததாலேயே அவையெல்லாம் முன்னர் இந்தோனேஷ்யா என்று வழங்கப்பட்டு வந்தது. ஆனால், இப்போது சுமத்ரா, ஜாவா முதலிய வரிசையிலுள்ள தீவுகளை மாத்திரமே இந்தோனேஷ்யா என்று குறிப்பிடுகிறார்கள்.

அந்தப் பிரதேசங்களில் எல்லாம் புத்த மதம் பரவியிருப்பதோடல்லாமல், இந்தியாவின் இதிகாசங்களும் கலைகளும் சித்திரங்களாகவும் சிற்பங்களாகவும் இன்று கூட அற்புதமாகக் காட்சி யளிப்பதைப் பார்க்கிறோம்.

அது மாத்திரமல்ல; இந்தோனேஷ்யத் தீவுகளில் இன்று வாழும் மக்கள் யாவரும் ஆதியில் அங்கு சென்ற ஹிந்துக்களின் சந்ததிகளேயாவர்.

இந்தோனேஷ்யத் தீவுகளில் முக்கிய ஸ்தானம் வகிக்கும் ஜாவாவைப் பூலோக ஸ்வர்க்கம் என்றே சில சரித்திராசிரி

அதுதான். இந்தியா, பாகிஸ்தான் முதலிய நாடுகளுக்குக் கொடுக்கவேண்டிய ஸ்டர்லிங் கடனைப் பைசல் செய்யச் சக்தியற்று மேற்படி கடனை அமெரிக்காவின் தலையில் கட்டிவிட முயற்சித்து வரும் பிரிட்டன், பர்மா முதலிய தென் கிழக்கு ஆசியா நாடுகளுக்குப் பரிந்து கொண்டு பண உதவி அளிக்க முன் வந்திருப்பதன் விந்தையும் அதுதான்.

பிரிட்டன் தலைமையில் காமன்வெல்த் நாடுகள் ஆசியாவுக்கு அளிக்க உத்தேசித்திருக்கும் தொகை, கடலில் பெருங்காயம் கரைப்பதற்கு ஒப்பாக இருக்கிறது. ஏனெனில், அந்த அற்பத் தொகையைக் கொண்டு எந்த நாட்டையும் உருவாக உத்தாரணம் செய்ய முடியாது. இருந்தாலும் ஆசியா நாடுகளின் விஷயத்தில் தங்களுக்கு மிகுந்த அக்கறை இருப்பது போலக் காட்டிக்கொள்ள அந்த வல்லரசுகள் தயங்குவதில்லை!

ஏன், ஆசியா மண்டலத்திலுள்ள ஆஸ்திரேலியாவும் ஆசியா நாடுகளிடம் நல்ல பெயர் வாங்க முயற்சித்து வருகிறது. இல்லாவிடில் பூரண அமைப்பைத் தவிர மற்ற எல்லா விதத்திலும் பிரிட்டனுடனும் அமெரிக்காவுடனும் நெருங்கிய தொடர்புள்ள ஆஸ்திரேலியா, அந்த வல்லரசுகளுக்கு விரோதமாக ஐக்கிய நாடுகள் சபையிலே இந்தியா முதலிய நாடுகளுடன் சேர்ந்து இந்தோனேஷ்யாவின் சுதந்திர உரிமையை ஆதரிக்க முன்வந்திருக்குமா?

இதுவரையில் ஏற்பட்ட மகா யுத்தங்களிலும் சில்லறை யுத்தங்களிலும் ஆஸ்திரேலியா பிரிட்டனுக்குப் பரிபூரண உதவி அளித்து வந்திருக்கிறது. சமீப காலமாக ஆஸ்திரேலியா தன் இராணுவத்தைப் பலப்படுத்துவதில் தீவிரமாக முனைந்திருக்கிறது. அது தன் கடற்படையைப் பெருக்குவதற்காக ஏழரைக் கோடி பவுன் செலவில் ஒரு திட்டம் போட்டிருப்பதாகச் சென்ற வாரம்கூடச் செய்திகள் வெளியாயின. ஆஸ்திரேலியா தன் படைப் பலத்தைப் பெருக்க முற்பட்டிருப்பதன் நோக்கம் என்ன? அந்தப் பலத்தைக் கொண்டு ஆஸ்திரேலியா ஆசியா நாடுகளில் ஆதிக்கம் செலுத்த விரும்பும் வல்லரசை—அது எந்த வல்லரசாயினும்—எதிர்த்தும் ஆசியா நாடுகளுக்குத் துணையாகவும் நிற்குமா?

## 3. இந்தோனேஷ்யா

பாற்கடலைக் கடைந்தபோது கிடைத்த அமிருதத்தை யார் அடைவது என்பதற்காக ஒரு காலத்தில் தேவர்



கங்காரு

களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்தது அல்லவா? அது போலவே பூமியிலுள்ள ஒரு சுவர்க்கம் யாருக்குச் சொந்தமாக இருப்பது என்பதற்காகப் பல நூற்றாண்டுகளுக்கு முன் பல ஆண்டுகள் வரையில் யுத்தம் ஒன்று நடந்தது!

முதலில் அந்த யுத்தம் ஹிந்துக்களுக்குள்ளேயே நடந்தது; பிறகு ஹிந்துக்களுக்கும் அன்னிய நாட்டினருக்கும் நடந்தது.

அந்தச் சுவர்க்கம் தங்களுக்குச் சொந்தமாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தென்னிந்திய சாம்ராஜ்ய மண்டலாதிபதிகள் போரிட்டார்கள்.

புராதன இந்தியாவில்,—சுமார் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் கப்பல்களை நிர்மாணிப்பதிலும் ஓட்டுவதிலும் குறிப்பாகத் தென்னிந்தியர்கள் மிகச் சிறந்து விளங்கினார்கள். அக்காலத்தில் இப்போது இருப்பதைக் காட்டிலும் இந்தியாவில் அதிகமான துறைமுகங்கள் இருந்தன. கிறிஸ்துவ சகாப்தத்தின் இரண்டாவது நூற்றாண்டுகளில் தென்னிந்தியாவிலே புழக்கத்தில் இருந்து வந்த நாணயங்களில் மரக்கலக் கப்பல்கள் காணப்படுவதே அதற்கு அத்தாட்சி. அஜந்தா சித்திரங்களிலும் இலங்கையை இந்தியா வெற்றி கொண்டதும், இந்தியர்கள் பண்டைய காலத்தில் வெளி நாடுகளில் விற்பதற்காக யானைகளைக் கப்பல்களில் ஏற்றிக் கொண்டு போனதும் காட்சியளிக்கின்றன.

அன்னியர்கள் இந்தியா மீது படையெடுத்ததையும் இங்கு ஆட்சி புரிந்ததையும் தான் சரித்திரம் விஸ்தாரமாகக் கூறுகிறதேயன்றி, அன்னியர் படையெடுப்புக்கு முன் பாரதநாடு எவ்வளவு வல்லமையுடனும் சிறப்புடனும் நாகரிகத்துடனும் விளங்கி வந்தது என்பதைப் பற்றி அன்னியர்களின் ஆட்சியில் எழுதப்பட்ட சரித்திர நூல்களில் எதுவுமே இல்லை. இந்தியாவிலுள்ள சரித்திர நூல்களில் இருப்பதைக் காட்டிலும் சீனர்கள் எழுதி

சாலைகளிலோ கல்வி கற்று வெளியில் வருவோர் வேலை யில்லாமல் கஷ்டப்படும்படி நேருவதே இல்லை. சகல கல்விச் சாலைகளிலும் குழந்தைகளுக்கு இலவசமாக வைத்திய வசதி அளிக்கப்படுகிறது.

ஆஸ்திரேலியாவில் உள்ள முக்கிய நகரங்களில் சிறந்த புத்தகசாலைகள் இருக்கின்றன. புத்தகங்களைப் படிப்பதில் ஆஸ்திரேலியர்களுக்குள்ள எல்லையற்ற ஆர்வம் உலகில் வேறு எந்த நாட்டினருக்கும் இல்லை என்று கூறப்படுகிறது.

அந்த நாட்டில் நூற்றுக் கணக்கில் சிறந்த ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன. ஒவ்வொரு நோயாளிக்கும் ஒரு நாளைக்கு எட்டு சென்டு (ஆறு அணு) வீதம் சர்க்கார் எல்லா ஆஸ்பத்திரிகளுக்கும் உதவித் தொகை கொடுத்து வருகிறார்கள். வயோதிகர்கள், நோயாளிகள், விதவைகள் முதலியோருக்கு நிரந்தரமாகப் பண உதவி அளிப்பதில் ஆஸ்திரேலிய சர்க்கார் பெரும் தொகை செலவிடுகிறார்கள்.

அந்த நாட்டிலுள்ள சகல முக்கிய நகரங்களும் கடற்கரை ஓரமாக இருப்பதால் ஆஸ்திரேலியர்கள் நீந்துவதில் நிபுணர்களாக இருக்கிறார்கள். கிரிக்கெட் போன்ற விளையாட்டுகளிலும் ஆஸ்திரேலியர்களில் பலர் உலகப் பிரசித்தி பெற்று விளங்குகிறார்கள்.

இலக்கியம், சங்கீதம், நாடகம், சிற்பம், ஓவியம் முதலிய துறைகளிலும் ஆஸ்திரேலியா அபிவிருத்தி அடைந்திருக்கிறது.

அது காமன்வெல்த் நாடுகளில் ஒன்றாக இருப்பதால் அங்கு பிரிட்டிஷ் மன்னரின் பிரதிநிதியாக கவர்னர் ஜெனரல் நியமிக்கப்படுகிறார்.

ஆஸ்திரேலியாவுக்குத் தெற்கேயுள்ள டாஸ்மேனியா தீவும் ஆஸ்திரேலிய மாகாணங்களில் ஒன்றாகவே இருக்கிறது. 1642-ம் வருஷம் ஜான் ஸான் டாஸ்மென் என்ற டச்சு மாலுமி அந்தத் தீவைக் கண்டு பிடித்ததால், அது அவருடைய பெயரால் வழங்கி வருகிறது. ஆஸ்திரேலியாவிலுள்ள மற்ற மாகாணங்களைப் போலவே டாஸ்மேனியா தீவுக்குப் பார்லிமெண்டு, மந்திரி சபை எல்லாம் உண்டு. டாஸ்மேனியா முப்பதாயிரம் சதுர மைல் விஸ்தீர்ணம் உள்ள தீவு.



குரைக்கத்தெரியாத ஆஸ்திரேலியா நாய்

★

ஆஸ்திரேலியா சம்பந்தமான மற்றொரு விஷயம் உலகத்திலேயே இராத அதிசயமாகும். இந்தியாவும் பாகிஸ்தானும் சேர்ந்து மொத்தம் பதினாறு லட்சம் சதுரமைல் விஸ்தீர்ணம் இருக்கின்றன. ஆனால் ஆஸ்திரேலியாவின் மொத்த விஸ்தீர்ணம் முப்பது லட்சம் சதுர மைல்கள் ஆகும். அதாவது இந்தியாவையும் பாகிஸ்தானையும் விட ஆஸ்திரேலியா இரண்டு மடங்கு பெரியது. அதன் கடற்கரை ஓரத்தின் நீளம் மாத்திரம் 11,310 மைல்கள் ஆகும்!

எனினும் ஆஸ்திரேலியாவின் ஜனத்தொகை மிக மிகக் குறைவு. இந்தியாவும் பாகிஸ்தானும் சேர்ந்து நாற்பது கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். இந்த இரு நாடுகளையும் காட்டிலும் இரண்டு மடங்கு பெரியதாக இருக்கும் ஆஸ்திரேலியாவில் முக்கால் கோடி ஜனங்கள் தான் இருக்கிறார்கள்!

அதிக ஜனத்தொகையைச் சமாளிக்க முடியாமல் தத்தளிக்கும் நாடுகளிலிருந்து அங்கு ஜனங்கள் போகவும் முடியாது. ஏனெனில் சுத்த வெள்ளையர்களைத் தவிர வேறு யாருக்கும் அந்தேசத்தில் இடம் கொடுக்க முடியாது என்று ஆஸ்திரேலிய வெள்ளையர்கள் மறுக்கிறார்கள்.

அவ்வாறு மறுப்பது ஜனநாயகக் கொள்கைக்கு உகந்ததாகுமா? தென்னாப்பிரிக்கா அனுஷ்டித்து வரும் நிற வேற்றுமைக் கொள்கைக்கும் ஆஸ்திரேலியாவின் கூற்றுக்கும் வித்தியாசம் உண்டா? புத்துயிரும் புதிய சக்தியும் பெற்று வரும் ஆசியாவை அடுத்துள்ள, ஆசியாவின் தயவு இருக்கவேண்டிய ஆஸ்திரேலியா இன்னும் எவ்வளவு காலத்துக்கு மேற்படி நிற வேற்றுமைக் கொள்கையை அனுஷ்டித்து வர முடியும்?

★

எதிர்காலத்தில் உலக அரங்கத்திலே ஆசியா நாடுகள் மிகுந்த செல்வாக்குடன் விளங்கலாம் என்பதற்கான அறிகுறிகள் இருந்து வருகின்றன. அத்தகைய நிலைமை ஏற்படுமுன் ஆசியா மண்டலத்தில் தங்களுடைய செல்வாக்கை நிலை நிறுத்திக் கொள்ளவேண்டும் என்பதற்காக அமெரிக்காவும் பிரிட்டனும் முயற்சித்து வருகின்றன. ஆசிய நாடுகளை உத்தாரணம் செய்வதற்காக அமெரிக்கா பண உதவி செய்ய முற்பட்டிருப்பதன் காரணம்




சுமத்ராவிலுள்ள பிரசித்தி பெற்ற எரிமலைகளில் ஒன்று

## ஆஸ்திரேலியா (தொடர்ச்சி)

உலகத்தில் கல்வித் துறையிலே முன்னணியில் நிற்கும் தேசங்களில் ஆஸ்திரேலியாவும் ஒன்று. அங்கு பதினாறு பதினைந்து வயது வரையில் சிறுவர் சிறுமியருக்குக் கட்டாயக் கல்வி அளிக்கப்படுகிறது. திறமையுள்ள மாணவர்கள் பல்வேறு தொழில் துறைகளிலும் ஈடுபடுவதற்கு எத்தனையோ வசதிகள் இருக்கின்றன. பணம் இல்லை என்றோ, வசதி இல்லை என்றோ, அல்லது சலுகை சிபார்சு இல்லை என்றோ, புத்திசாலிகளான மாணவர்கள் ஆஸ்திரேலியாவில் தவிக்கும்படி நேருவதில்லை. மேதாவிகளான மாணவர்களுக்கு ஊக்கம் அளித்து அவர்களுக்கு உதவி புரிவதில் ஆஸ்திரேலியா சர்க்கார் காட்டும் சிரத்தை மிகவும் போற்றத் தக்கது. அத்தகைய மாணவர்களுக்குத் தேசிய சர்க்கார் புத்தகங்களும் பள்ளிக்கூடச் சம்பளமும் இலவசமாக அளிப்பதுடன், அவர்களுடைய பெற்றோர்களுக்கும் உதவித் தொகை கொடுக்கிறார்கள்!

மேற்கு ஆஸ்திரேலியாவில் ஒவ்வொரு சிறுவர் சிறுமியருக்கும் 'அரிச்சுவடி'யிலிருந்து சர்வ கலாசாலைப் படிப்பு வரையில் இலவசமாகக் கிடைக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மாணவர்களுக்குச் சர்வகலாசாலைக் கல்வி இலவசமாகக் கிடைக்கும்படி செய்துள்ள ஆஸ்திரேலியாவின் பெருமையை என்னவென்று சொல்வது! இது மட்டுமா? வயது முதிர்ந்தோர்கூடப் பகலில் ஏதாவது தொழில் செய்துகொண்டு இரவில் உயர்தரக் கல்வி பெறுவதற்கு வசதியாக இரவில் நடைபெறும் சர்வகலாசாலைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஆஸ்திரேலியாவில் கல்வித் துறையில் தொழிற் கல்விக்குத்தான் விசேஷ முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள். சர்வகலாசாலைகளிலிருந்து வெறும் பட்டதாரிகளாக வெளி வருவோரைக் காட்டிலும் டாக்டர்களாகவும், இன்ஜினீர்களாகவும், தொழில் நிபுணர்களாகவும் வெளி வருவோரின் தொகைதான் மிகவும் அதிகமாகும். கைத்தொழில் கல்விச் சாலைகளுக்குத் தொழில் முதலாளிகளும் சர்க்காரும் சேர்ந்து ஏராளமான தொகை உதவியளிக்கிறார்கள். மேற்படி கைத்தொழில் கல்விச் சாலைகளிலோ அல்லது சர்வ கலா

தங்கள் நாட்டைச் சிலர் வந்து பாழ வனமாக்கியபின் ரஷ்யர்கள் பேசாமலிருப் பார்களா? அதையும் இதோ சொல்லு கிறார் நமது மேல் நாட்டு ஜோதிடர்:—

ரஷ்யாவிலிருந்து ஒரே ஒரு விமானம் கிளம்பி இங்கிலாந்து மார்க்கெட்டில் கொண்டு போய் ஒரு குண்டைப் போடு மாம். அதனால் தண்ணீர் கொந்தளித்து லண்டனையும் சுற்றிலுமுள்ள இதர நாடு களையும் வெள்ளக் காட்டில் மூழ்கி விடுமாம்.

ரஷ்யாவையும் இங்கிலாந்தையும் சந் திக்கிழுத்த ஜோதிடர் போப்பாண்ட வரையும் விடவில்லை. ஒரு வேளை போப் பாண்டவரின் ஜாதகத்தையும் பார்த் தாரோ என்னவோ?

பிரான்ஸில் பெரிய புரட்சி ஏற்படு மாம். அந்தச் சமயத்தில் போப்பாண் டவர் ரோமை விட்டு வெளியேறி தலை மறைவாகச் சில காலம் எங்கோ வசிப் பாராம். கடைசியில் ரோமுக்கே திரும்பி வருவாராம்.

இவ்வளவையும் சொல்லிவிட்டுக் கடை சியில் மங்களகரமாகத் தன் கதையை முடிக்கிறார், அவர்.

'கடைசியில் ஆஸ்திரியா, ஹங்கேரி, பவேரியா மன்னர்களுக்கு போப்பாண் டவர் முடிசூட்டி வைப்பாராம்.'

இந்த ஜோதிடரிடம் எனக்கு ஒரே ஒரு குறை. ஆஸ்திரிய, ஹங்கேரிய, பவேரிய மன்னர்கள் முடி சூட்டிக் கொண்டபின் தங்கள் சமஸ்தான ஜோதிடராய் யாரை நியமிப்பார்கள் என்று சொல்லாமல் விட்டு விட்டதுதான் பெரும் குறை.

டிரிக்வி லீ சிரித்தார் என்றால் ஏன் சிரிக்க மாட்டார்? பாவம், அந்த மனிதர் யுத்தம் வராமல் தடுக்கவோ, அல்லது யுத்தத்தை வரும்படிச் செய்யவோ, பசி உறக்கம் பாராமல் அமெரிக்காவிலிருந்து ரஷ்யாவிற்கும், ரஷ்யாவிலிருந்து பாரிசுக் கும், பாரிசிலிருந்து லண்டனுக்குமாக அலைகிறார். இந்த நிலையில் 'உலகில் யுத் தம் வரும், வராது' என்று புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் ஹேஷ்யங்களும் ஜோஸ்யங்களும் மூலைக்கு மூலை கிளம் பினால் ஏன் அந்த மனிதருக்குச் சிரிப்பு வராது? கட்டாயம் வரும். ஏன் அவர் மட்டும் சிரிக்க வேண்டும்? நாமும் சிரிப் போம்! யுத்தம் வருவதாயிருந்தாலும் யுத்தம் வராமலே போவதாயிருந்தாலும் சிரிப்பதைக் கடமையாக எண்ணிச் சிரிப் போம். யுத்தம் வராமலிருந்தால் பலர் சொன்ன ஹேஷ்யங்களும் ஜோசியங் களும் பலிக்காமல் போய்விட்டதே என்று சிரிப்போம். யுத்தம் வந்து விட் டால் 'ஒரு யுத்தத்தினால் உலகம் பட்ட புண்ணின் தழும்பு மறையா திருக்கும் போது மற்றொரு உலக மகா யுத் தத்தை வல்லரசுகள் துவங்கி விட்டார் களே, என்று எண்ணிச் சிரிப்போம்.



★ ★ ★ திருநெல்வேலி ஜில்லா கடைய நல்லூரில் அல்லூர் இளைஞர்கள் "காந்திஜி கழகம்," "பாரதி சங்கம்" என்பதாக இரண்டு சங்கங்களை ஸ்தாபித்து அருமையான முறையில் ஊக்கத்துடன் நடத்தி வருகிறார்கள். காந்திஜி கழகத்தின் ஆண்டு விழா சென்ற மே மாதம் 12உ மாலை மிக விமரிசையாக நடைபெற்றது. அந்த விழாவில் கலந்து கொண்ட பிரமுகர்களையும் கழக அங்கத்தினர்களையும் மேலேயுள்ள படத்தில் காணலாம். ★ ★ ★

# முச்சந்தி

### துதிக்கையார் எழுதுகிறார்

'ஐ. நா. சபை பொதுக் காரியதரிசி டிரிக்வி லீ சிரித்தார்!'

'சிரித்தாரா?'

'ஏன் சிரித்தார்?'

'எதற்காகச் சிரித்தார்?'

'எங்கே சிரித்தார்?'

'எப்பொழுது சிரித்தார்?'

'எப்படிச் சிரித்தார்?'

'சாதாரணமாகப் புன்னகை புரிந்தாரா? வாய்விட்டுக் கடகட வென்று சிரித்தாரா?'

'விஷமமாகச் சிரித்தாரா? விளையாட்டாகச் சிரித்தாரா?'

'சிரிக்கும்போது அவர் முகம் தெளிவாக இருந்ததா? கடுமையாக இருந்ததா?'

'அச்சிரிப்பில் துக்கம் கலந்திருந்ததா, சந்தோஷம் கலந்திருந்ததா?'

இவைகளெல்லாம் இப்பொழுது உலகமெங்கும் உள்ள அரசியல் வாதிகளுக்கும், பத்திரிகை நிருபர்களுக்கும், யுத்தம் வரவேண்டும் என்று பிரார்த்திப்பவர்களுக்கும், யுத்தம் வரக்கூடாது என்று பிரார்த்திப்பவர்களுக்கும் தலைபோகும் விஷயமாயிருக்கும்.

'டிரிக்வி லீ எதற்காகச் சிரித்தார்?'

சென்ற இரண்டாவது உலக யுத்தம் முடிந்ததிலிருந்தே மறுபடியும் ஒரு யுத்தம் வரப்போகிறதென்ற குழப்பம் தக்க ஆதாரத்துடனோ ஆதாரமில்லாமலோ உலகைச் சூழ்ந்திருக்கிறது. இந்தக் குழப்பம் சமீபகாலத்தில் இன்னும் அதிகமாகி விட்டது. வல்லரசுகளின் ஆர்ப்பாட்டங்களினால் இதைப்பற்றிய ஜோசியம் ஹேஷ்யங்களெல்லாம் அசாத்யமாகிக் கொண்டு போகின்றன.

ஹேஷ்யங்கள் தொலையட்டும்; இந்த ஜோசியர்கள் படுத்துகிற பாடுதான் பிரமாதமாக இருக்கிறது. இதை நினைத்தால் டிரிக்வி லீ மாத்திரமல்ல, நாமும் சிரிக்கத்தான் வேண்டும்.

உலகத்தில் எல்லோருக்கும் கொஞ்சம் சுதந்திரம் கிடைத்திருக்கிறது. பாவம், இந்த நவக்கிரகங்களுக்கு மாத்திரம் இன்னும் சுதந்திரம் கிடைக்கவில்லை. அவை இந்த ஜோதிடர்களின் கையில் அகப்பட்டுக் கொண்டு படாத பாடு படுகின்றன. அவற்றைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. ஒன்றை ஒன்று பார்க்காமல் பல கோணங்களில் நின்று கொண்டிருந்த நவக்கிரகங்களும் இப்பொழுது ஒன்றையொன்று நேர்முகமாகவே பார்த்துத் தங்கள் விடுதலைப் போராட்டத்தைச் சாத்விகமான முறையில் செய்வதா, பலாத்காரமான முறையில் செய்வதா என்று தீவிரமாக ஆலோசிப்பதாகத் தெரிகிறது.

சென்னைக் கார்ப்பரேஷன் கட்டிடத்திலிருந்து மூர்மார்க்கெட் கடைசி வரையிலுமுள்ள நடை பாதையில் ஒரு நாள் மாலை வேளையில் போய்ப் பாருங்கள்: ஐந்தாறு குருவி ஜோசியர்கள், ஐந்தாறு கைரேகை ஜோசியர்கள், கிரக மண்டலப் படங்களையும், ஜோதிடப் புத்தகங்களையும் வைத்துக் கொண்டு ஆருடம் சொல்லுகிறவர்கள், ஐந்தாறு பேர் ஆகப் பதினைந்து பேர்களுக்குக் குறைவில்லாமல் பார்க்கலாம். இந்த ஒரு இடத்திலேயே இப்படி என்றால் இன்னும் நகர் பூராவும் நாடு பூராவும் உலகம் பூராவும் எவ்வளவு ஜோதிடர்கள் இருப்பார்கள் என்று கணக்கிடுவது கடினம்.

இந்த ஜோதிட விஷயத்தில்கூட நம் நாட்டவர் கொஞ்சம் பிற்போக்கானவர்களாக இருக்கிறார்கள். தாராளமாகப் புளுகு மூட்டைகளை அவிழ்க்கப் பயப்படுகிறார்கள். இயற்கைக்கும், காலத்திற்கும், நடை முறைக்கும் புறம்பாக ஒன்றைச் சொல்ல அஞ்சுகிறார்கள். ஆனால் மேல் நாட்டு ஜோதிடர்கள் அப்படி சிந்திக்காமல், கணக்கிடாமல், இயற்கைக்குப் புறம்பாகப் புளுகுவதில் அசகாய சூரர்கள்.

இதோ ஒரு மேல் நாட்டு ஜோதிட சிகாமணி சங்கராந்தி தேவதை பவனி வரப் போவதைப் பஞ்சாங்கத்தில் வர்ணிப்பது போல் யுத்தம் வரப் போகும் விதத்தைக் கொஞ்சமும் வாய் கூசாமல் வர்ணிக்கிறார் பாருங்கள்:

'இவ் வருடம் இலையுதிர் காலத்தில் மழை பெய்யும் ஒரு இரவில், பெரும் படைகள் கிழக்குத் திக்கிலிருந்து மேற்குத் திக்கிற்குப் பாயும். இதிலிருந்து உலக யுத்தம் தீவிரமாக மூளும்!'

இதோடு மட்டுமல்ல — ஆப்பிரிக்காவிலிருந்து சில விமானங்கள் புறப்பட்டு வருமாம். அவைகளில் ஒன்று 'கறுப்புப் பெட்டி' போன்ற ஒன்றைச் சுமந்து வந்து ரஷ்யக் கம்யூனிஸ்ட் காரியாலயத்தின் மீது போடுமாம். இதனால் அந்த இடத்தைச் சுற்றிப் பல மைல்கள் பாலைவனமாக மாறிப் போய் விடுமாம்.

என்றும் தேவ தூதர்கள் சொர்க்கத்துக்கு அழைத்துப் போக வேண்டும் என்றும் தர்க்கம் செய்தார்கள். மத்தியஸ்தம் செய்ய வந்த சித்திரகுப்தன் அவருடைய அபிப்பிராயத்தையே கேட்டுவிடலாம் என்றான். 'உம்மை எங்கே அழைத்துப் போகவேண்டும்? யமலோகத்துக்கா, சொர்க்கலோகத்துக்கா?' என்று எஸ். வி. வி. யைக் கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர் 'இந்தக் கேள்விக்கு ஜவாபைக் கேட்டுத்தான் பதில் சொல்ல வேண்டும்' என்றார், 'அது யார் ஜவாப்?' என்று கேட்டார்கள். எஸ். வி. வி. இலேசாகச் சிரித்துவிட்டு, 'பூலோகத்தைக் காட்டிலும் இங்கே படிப்பு அதிகம் போயிருக்கிறதே! உங்களையெல்லாம் எம். எல். ஏ. க்கள் ஆக்கி விடலாம் போலிருக்கிறதே!' என்றார். இதைக் கேட்டதும் எனக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. ஆனால் அந்த யமலோகத் தூதர்களும் சொர்க்க லோகத் தூதர்களும் ஒன்றும் தெரியாமல் விழித்தார்கள். சித்திரகுப்தன் கோபித்துக் கொண்டு 'இவர் இவ்வளவு பிடிவாதக்காரராயிருப்பதால் யமலோகத்துக்கே கொண்டு போங்கள்!' என்று உத்தரவு போட்டுவிட்டான்..."

இமயமலை இப்படிச் சொன்னதும், விந்தியமலை, திருவண்ணாமலை, பொதிகை மலை, நீலகிரி மலை இவ்வளவும் சேர்ந்து "அடடா!" என்று அநுதாபப்பட்டன.

"கேளுங்கள் பாக்கியையும்! அதற்குள் அழவேண்டாம். சித்திர குப்தன் உத்தரவுப்படி எஸ். வி. வி. யை யமலோகத்துக்குக் கொண்டு போனார்கள். அங்கே அவர் போனதும் யமலோகத்தில் இருந்தவர்கள் அத்தனை பேரும் ஓயாமல் சிரிக்கத் தொடங்கினார்கள். அது யமலோகம் என்பதே எல்லாருக்கும் மறந்து போய்விட்டது. நரகவேதனையும் இல்லாமற் போய்விட்டது. உடனே யமன், 'இவரை இங்கே வைத்திருக்கக் கூடாது' என்று தீர்மானித்து எக்ஸ்பிரஸ் புஷ்பக விமானத்தில் சொர்க்கலோகத்துக்கு அனுப்பி வைத்தான். யமலோகம் எப்படித் திகிலோகப்பட்டது என்னும் விஷயம் ஏற்கெனவே சொர்க்கத்துக்கு எட்டியிருந்தது. ஆகையால் அங்கே என்ன செய்தார்கள் தெரியுமா?"

"என்ன செய்தார்கள்? சீக்கிரம் சொன்னால் தேவலை! சொர்க்க லோகத்துக்கும் ஆபத்து வந்து விட்டதா?"

"இல்லை இல்லை! யமலோகத்தைப் போல் சொர்க்கலோகமும் சிரிப்பாய்ச் சிரிக்கக்கூடாது என்று எண்ணி அங்கே எஸ். வி. வி. வந்ததும், நாரதரின் கையிலிருந்த வீணையைப் பிடுங்கி, எஸ். வி.வி.யின் கையில் கொடுத்துவிட்டார்கள். அதுமுதல் எஸ் வி.வி வீணையை மீட்டிக் கொண்டு சங்கீத ஆனந்தத்தில் ஈடுபட்டிருக்கிறார். இதனால் சொர்க்கம் சிரிப்பாய்ச் சிரிக்காமல் தப்பிப் பிழைத்தது!"

"இமயமலையாரே! இதையெல்லாம் எங்களுக்குத் தெரிவித்ததற்காக மிக்க நன்றி!" என்றது பொதிகை மலை.

"நான் நெட்டைப் பனைமரம்போல் இருக்கிறேன் என்று நீங்கள் அடிக்கடி பரிகாசம் செய்கிறீர்களே? அப்படி உயரமாயிருப்பதனால்தான் யமலோகத்தையும் சொர்க்க லோகத்தையும் எட்டிப் பார்க்க முடிகிறது விந்தியமலையாரே! திருவண்ணாமலையாருக்கு என்னுடைய அநுதாபத்தைத் தெரிவித்துவிட்டு ஆறுதல் சொல்லும்!" என்றது இமயமலை.

திருவண்ணாமலை தழதழத்த குரலில், "வந்தனம்!" என்று கூறியது.

இமயமலை, "ஆமாம்; நடுவில் ஒரு தடவை நீலகிரியின் குரல் கேட்டாற்போலிருந்தது. அது உண்மையா?" என்றது.

"ஆமாம்; என் குரல்தான்!" என்று நீலகிரி கீச்சுக்குரலில் சொல்லியது.

"நீலகிரியே! உன் குரலைக் கேட்கவே இனிமையாயிருக்கிறது. உன் பக்கங்களில் ஏதாவது விசேஷம் உண்டா? ஏதோ உன் பக்கத்தில் தமிழ் மகாநாடு நடந்தது என்று கேள்விப்பட்டேனே?" என்றது விந்திய பர்வதம்.

"ஆம், ஆம். கோயமுத்தூரில் தமிழ் வளர்ச்சி மகாநாடு நடந்தது. ஒரு வாரத்திற்குப் பிறகு அதற்குப் போட்டியாக இன்னொரு மகாநாடும் நடந்தது......" என்றது நீலகிரி.

"இது என்ன! எஸ். வி. வி. யின் ஹாஸ்யத்தை விடப் பெரிய ஹாஸ்யமாக அல்லவா இருக்கிறது? தமிழ்வளர்க்கவா இரண்டு? பொதிகையாரே! உம்முடைய அபிப்பிராயம் என்ன?" என்று இமயமலை கேட்டது.

"எனக்கும் அது வேடிக்கையாகத்தானிருக்கிறது. தமிழ் பூரண வளர்ச்சி அடைந்து மூவாயிரம் வருஷம் ஆயிற்று. ஆனாலும் இப்போதெல்லாம் தமிழபிமானம் போட்டி போட்டுப் பொங்கிக் கொண்டிருப்பது சந்தோஷமான விஷயந்தான். இருந்தாலும் மக்கள் முதலில் தங்கள் இதயங்களை விசாலமாக வளர்த்துக் கொள்ளவேண்டும். ஒருவரையொருவர் துவேஷிப்பது கூடாது. அதுதான் இப்போது வேண்டியது. தமிழுக்கு ஒரு குறைவும் இல்லை!" என்றார் பொதிகை மலையார்.

# வான வெளியிலே!

★ ★ ★

நேற்று நள்ளிரவிலே மீண்டும் வானவெளியில் மலைகளின் குரல்களைக் கேட்க நேர்ந்தது.

"பொதிகையாரே! பொதிகையாரே! விழித்திருக்கிறீரா? நான்தான் விந்திய மலை பேசுகிறேன்!"

இதற்குப் பதிலாகப் பொதிகை மலையின் குரல் மிகவும் கம்மிப் போய் வந்தது: "விழித்துக் கொண்டுதா னிருக்கிறேன். இங்கே சாரல் சக்கைப்போடு போடுகிறது. மழை, காற்று, அருவி எல்லாமாகச் சேர்ந்து ஒரே சத்தம். ஆகையால் கொஞ்சம் உரத்துப் பேசுங்கள்."

"அப்படியா? மழை அங்கே பெய்கிறதா! சந்தோஷம்! இங்கேயும் கொஞ்சம் அனுப்பிவைத்தால் நல்லது; வெப்பம் தாங்க முடியவில்லை."

"முன் வழி நடப்போகும் மரங்களை உன்னுடைய பக்கங்களிலேயும் வைக்கச் சொல்லு. மரங்கள் வளர்ந்து காடான பிறகு மழை பெய்யும்."

"சரிதான்; அதற்குள்ளே என் பாடு அரோகரா ஆகிவிடும் ஆமாம்; அண்ணாமலையாருக்கு என்ன நேர்ந்தது? மறுபடியும் ஏதாவது ஆபத்து உண்டா? பல தடவை அழைத்தேன்; ஏன் என்று கேட்கவில்லையே?"

"பாவம்! அண்ணாமலையாருக்கு மறுபடியும் ஒரு பெரிய நஷ்டம் ஏற்பட்டுவிட்டது. கொஞ்ச நாளைக்கு முன்னால் ரமண ரிஷிகள் புறப்பட்டுச் சென்றாரா? திருவண்ணாமலையைச் சேர்ந்த மற்றொரு பிரசித்தமான புருஷர் சென்ற வாரத்தில் விடை பெற்றுக்கொண்டார். அதனால் அண்ணாமலை சோக-சாகரத்தில் மூழ்கிக் கிடக்கிறது!"

"அவர் யார் அப்படிப்பட்ட மனிதர்? திருவண்ணாமலைக்காரர்?"

"எஸ். வி. வி. என்று கேட்டிருக்கிறாயா? ஆனால் நீ எங்கே கேட்டிருக்கப் போகிறாய்? நீதான் விராட்சர குட்சியாயிற்றே!"

"எனக்குத் தெரியாவிட்டால் போகட்டும். நீதான் சொல்லேன்!"

"எஸ். வி. வி. என்பவரின் முழுப் பெயர் எஸ். வி. விஜயராகவாச்சாரியார். பிரசித்தமான எழுத்தாளர். சிரிக்கச் சிரிக்க எழுதுவார். நகைச் சுவையே இன்னதென்று தெரியாத நீகூட அவர் எழுதின விஷயங்களைக் கேட்டால் சிரித்து மகிழ்வாய். காஞ்சிபுரத்துக் கோயில் யானைக்கு வடகலை நாமம் போடுவதா, தென்கலை நாமம் போடுவதா என்பதைப் பற்றி நடந்த ஒரு கோர்ட்டு வழக்கைப் பற்றி எழுதியிருந்தார். அதைக் கேட்டு விட்டு அந்தக் கோயில் யானை கூடச் சிரித்தது என்றால் நீ சிரிப்பதற்குக் கேட்பானேன்?"

"பொதிகையாரே! அந்த எஸ். வி. வி. என்பவர் தமிழ் மொழியிலேதானே எழுதினார்? அந்த மூன்று எழுத்து ஒரு மாதிரி தொனிக்கிறதே!"

"முதலில் இங்கிலீஷ் பாஷையிலே தான் அவர் எழுதிக் கொண்டிருந்தார். எனக்குக்கூடக் கொஞ்சம் வருத்தமாயிருந்தது. பிறகு தமிழ் ரஸிகர்கள் சிலர் தூண்டியதன் பேரில் தமிழில் எழுத ஆரம்பித்தார். பிறகு இங்கிலீஷுக்கே அவர் போகவில்லை. தமிழில் எழுதினால் பெரிய பெரிய அறிஞர்கள் முதல் ஸ்திரீகள், குழந்தைகள் வரை படித்து மகிழ்கிறார்கள் என்பதைக் கண்ட பிறகு இங்கிலீஷில் ஏன் எழுதப் போகிறார்?"

"பெரிய பெரிய அறிஞர்கள் என்றால்... அப்படி யார் யார்?"

"ஏன், ராஜாஜி என்ன? ரஸிகமணி என்ன? மகாகனம் சீனிவாச சாஸ்திரி என்ன? இன்னும் எஸ். வரதாச்சாரியார், வி. வி. சீனிவாசய்யங்கார் என்ன?... இப்படி எத்தனையோ பேர் அவர் எழுதியதைப் படித்து மகிழ்ந்திருக்கிறார்கள்..."

இந்தச் சமயத்தில் திருவண்ணாமலையாரின் குரல் ஈனமாகக் கேட்டது.

"அண்ணா! விந்தியமலையே! இமய மலையாரிடம் கொஞ்சம் விசாரித்துப் பார்! அந்தப் பக்கமாக எங்கள் ஊர் எஸ். வி. வி. வந்தாரா என்று?"

விந்திய மலை இமயமலையிடம் கேட்டது. இமயமலை பேசுகிறது என்று குப்பென்று வந்த குளிர்ந்த காற்றிலேயிருந்து தெரிந்தது.

"ஆமாம்; அந்த எஸ். வி. வி. இந்தப் பக்கமாக வந்துதான் வானுலகத்துக்குப் போனார். எனது சிகரத்துக்கு மேலே கொஞ்ச தூரம் போனதும் அவரைப் பற்றி ஒரு வாக்குவாதம் ஏற்பட்டு விட்டது. யம தூதர்கள் அவரை யமனுலகத்துக்கு அழைத்துப் போவோம்

ஒரு அறிக்கை விடுத்து நிலைமையை மேலும் கேவலமாக்கி விட்டார்.

இப்போது அவ் விஷயமாக மௌலானா அபுல் கலாம் ஆஸாத் விடுத்துள்ள அறிக்கையிலிருந்து பண்டித ஜவாஹர்லால் நேரு செய்தது முற்றிலும் சரி என்பதும், டாக்டர் மத்தாய் நிதி மந்திரி பதவியிலிருந்து விலகிக்கொண்டது நாட்டுக்கு க்ஷேமம் என்பதும் தெளிவாகி யிருக்கின்றன.

நேரு-லியாகத் அலி ஒப்பந்தத்தைத் தாம் அங்கீகரிக்கவில்லை என்று டாக்டர் மத்தாய் கூறி யிருப்பது தமக்கு மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கிறது என்றும், மேற்படி ஒப்பந்தத்துக்கு விரோதமாக அவர் இதற்குமுன் ஒரு வார்த்தைகூடக் கூறியதில்லை என்றும் மௌலானா ஆஸாத் வெட்ட வெளிச்சமாக்கி யிருக்கிறார்.

சர்க்கார் செலவைக் குறைக்க வேண்டும் என்ற விஷயத்தில் மந்திரி சபையின் ஒத்துழைப்பு தமக்குக் கிடைக்கவில்லை என்று மத்தாய் கூறியிருப்பதை யாரும் ஒத்துக்கொள்ள முடியாது. ஏனெனில், சர்க்கார் செலவினங்களைக் குறைப்பதில் பிரதம மந்திரி, உதவிப் பிரதம மந்திரி முதலியோருக்கு இராத சிரத்தை டாக்டர் மத்தாய்க்கு ஏற்பட்டு விட்டதாக யாரும் நினைப்பதற்கில்லை.

எனவே, பண்டித நேருவுக்கும் டாக்டர் மத்தாய்க்கும் ஏற்பட்ட உண்மையான அபிப்பிராய பேதம் திட்டக் கமிஷனைப் பற்றியதுதான் என்று ஏற்படுகிறது.

அதாவது ஆலைத் தொழில் முதலாளிகளின் குறைகளை நீக்கி அவர்களுக்குச் சலுகைகள் காட்டினால் தொழில் முன்னேற்றத்திலும் உற்பத்தி பெருகுவதிலும் அவர்கள் சிரத்தை எடுத்துக் கொள்வார்கள் என்பது டாக்டர் மத்தாயின் கொள்கை.

மேற்படி முதலாளிகள் தொழில் முன்னேற்றத்தில் சிரத்தை எடுத்துக்கொண்டாலும் எடுத்துக் கொள்ளாவிட்டாலும் அதற்காகத் தேசம் காத்துக்கொண்டிருக்க முடியாது என்பதும், பல்வேறு குறுகிய கால, நீண்ட காலத் திட்டங்களைக் கைக் கொள்வதற்குத் திட்டக் கமிஷன் அவசியம் என்பதும் பண்டித ஜவாஹர்லால் நேரு முதலிய மந்திரிகளின் அபிப்பிராயம்.

தவிர, காங்கிரஸ் மகாசபை தேசியத் திட்டக் கமிஷனின் அவசியத்தை எப்போதுமே வற்புறுத்தி வந்திருக்கிறது என்பதையும் நாம் மறக்கக் கூடாது.

உற்பத்தி பெருகுவதற்காக முதலாளிகளுக்குச் சலுகைகள் அளித்த வண்ணமாக இருக்க வேண்டும் என்ற டாக்டர் மத்தாயின் அபிப்பிராயத்தைத் தேச க்ஷேமத்தில் கருத்துக் கொண்ட யாரும் ஆதரிக்க முடியாது.

உற்பத்தி பெருகுவது அவசியம் என்றால், அதே சமயத்தில் ஜனங்களின் மனதில் திருப்தி ஏற்படவேண்டியது அதிக முக்கியமான விஷயம்.

பல்வேறு திட்டங்களைக் கைக்கொண்டு மக்களின் கஷ்டங்களுக்குப் பரிகாரம் அளிப்பதில் சர்க்கார் சிரத்தை கொண்டிருக்கிறார்கள் என்ற திருப்தி ஜனங்களுக்கு ஏற்பட வேண்டும்.

தேசத்திலுள்ள எல்லோரும் முழுப் பட்டினி கிடந்தாலும் அல்லது அரைப் பட்டினி கிடந்தாலும்கூட ஜனங்கள் அதைத் திருப்தியுடன் சகித்துக் கொண்டு விடுவார்கள்.

ஆனால் ஒருவர் ஆறு வேளை உண்டு களித்திருக்க, தொண்ணூற்றொன்பது பேர் பட்டினி கிடப்பதை யார்தான் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

நாட்டில் அமைதியின்மையும் புரட்சியும் கலகமும் ஏற்படுவதற்கு அத்தகைய நிலைமைதான் காரணம்.

எனவே, ஒரு சில முதலாளிகளுக்குச் சலுகைகள் காட்டவேண்டும் என்பதற்காகத் திட்டக் கமிஷனை எதிர்க்கும் டாக்டர் மத்தாய் நிதி மந்திரி பதவியை ராஜிநாமா செய்தது ஜனங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய விஷயம் எனலாம்.

* * *

இந்திய சர்க்கார் புது நிதி மந்திரியாகப் பதவி ஏற்றுள்ள ஸ்ரீ சிந்தாமணி துவாரகநாத் தேஷ்முக் நீடித்து அந்தப் பதவியை வகித்து வருவார் என்று எதிர்பார்க்கிறோம்.

ஐ. ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ தேஷ்முக் ரிசர்வ் பாங்கி கவர்னராக இருந்தவர்; மற்றும் பல உயர்தரப் பதவிகளையும் வகித்தவர்; பொருளாதார விஷயங்களில் மகா நிபுணர் என்று பிரசித்தி பெற்றவர்.

எனினும் அவருடைய பதவி காலத்தில் பாரத நாட்டின் பொருளாதார நிலைமை எவ்வளவு தூரம் சீர்படும் என்பது பற்றி இப்போது எதுவும் சொல்லுவதற்கில்லை.

உயர்ந்த இலட்சியங்களையுடைய பழுத்த தேசியவாதி ஒருவர் சுதந்திர இந்தியாவின் நிதி மந்திரி பதவியை வகிக்கக் கிடைக்கவில்லை யென்பது ஏமாற்றமான விஷயந்தான்.

ஸ்ரீ தேஷ்முக் அந்த ஏமாற்றத்தைப் போக்கும் முறையில் இந்தியாவின் நிதி நிர்வாகத்தைத் திறம்பட நடத்துவார் என்று எதிர்பார்ப்போமாக.

# நிதி மந்திரி நாடகம்!

மந்திரி பதவி முட்கள் நிறைந்த படுக்கை என்று சில தினங்களுக்கு முன் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு வர்ணித்தார்.

இந்திய சுதந்திர சர்க்காரின் நிதி மந்திரிகளின் விஷயத்தில் அந்த வர்ணனை முற்றிலும் பொருத்தமானது என்று வெளியாகி வருகிறது.

சுதந்திர இந்திய அரசாங்கம் அமைக்கப் பட்டதும் அதில் நிதி மந்திரி பதவியை ஏற்ற ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியார் பிறகு அந்தப் பதவியை ராஜிநாமா செய்யநேர்ந்தது.

அவருக்குப் பின் நிதி மந்திரி பதவியை ஏற்ற டாக்டர் ஜான் மத்தாயும் சமீபத்திலே தமது பதவியை ராஜிநாமா செய்து விட்டார்.

எனினும் ஸ்ரீ செட்டியாரின் ராஜிநாமாவுக்கும் டாக்டர் மத்தாயின் ராஜிநாமாவுக்கும் எவ்வளவோ வேற்றுமை இருக்கிறது.

ஸ்ரீ ஷண்முகம் செட்டியார் தம்முடைய தவறை ஒப்புக் கொண்டு மந்திரி சபையிலிருந்து கண்ணியமாக வெளியேறினார். வெளியேறிய பின் சர்க்காரைக் கண்டித்து அவர் எதுவும் கூறவில்லை; அநாவசியமான வாதப் பிரதிவாதங்களைக் கிளப்பி விடவில்லை.

அவ்வாறு அவர் வெளியேறியதால் அவரது கௌரவம் உயர்ந்தது.

டாக்டர் மத்தாய் நிதிமந்திரி பதவியை ராஜிநாமா செய்த பின் மௌனமாக இருந்திருப்பாராயின் எவ்வளவோ மேலாக இருக்கும்.

அவ்வாறு இருப்பதுதான் ஜனநாயக தர்மத்துக்கும் மந்திரி சபையின் கூட்டுப் பொறுப்பு உணர்ச்சிக்கும் உகந்ததாக இருக்கும்.

பிரிட்டிஷ் அரசியல் தலைவர்கள் இந்த ஜனநாயக சம்பிரதாயத்தை மிக நன்றாய்க் கடைப்பிடித்துவருகிறார்கள்.

உதாரணமாக, லார்டு வேவல் இந்திய வைஸ்ராய் பதவியிலிருந்து விலகிய சம்பவத்தைப் பார்ப்போம்.

பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்கார் இந்தியாவின் அரசியல் பிரச்னை தீருவதற்கு இந்தியாவைப் பிரித்துத் தீர வேண்டும் என்று கருதினார்கள்.

இந்தியாவைப் பிரிக்கக் கூடாது என்பது லார்டு வேவலின் சித்தாந்தம்.

எனவே, தங்களுடைய நோக்கத்துக்கு மாறுபட்ட அவரைத் தொழிற் கட்சி சர்க்கார் அவமதிப்பான முறையில் 'டிஸ்மிஸ்' செய்துவிட்டு, வைஸ்ராய் ஸ்தானத்தில் லார்டு மவுண்ட்பாட்டனை நியமித்தார்கள்.

வேவலை அவ்வாறு பதவியிலிருந்து விலக்கியதைக் குறித்துப் பிரிட்டிஷ் பார்லிமெண்டிலும் பத்திரிகைகளிலும் கூக்குரல் எழுந்தது.

ஆனால், அவ் விஷயமாக லார்டு வேவல் வாயைத் திறக்கவில்லை.

இந்தியா பிரிக்கப்பட்டதால் இத்தேச மக்களுக்கு எத்தனையோ கஷ்ட நஷ்டங்களும் துன்பங்களும் நேர்ந்தன.

"நான் சொன்னதைக் கேட்காமல் இந்தியாவைப் பிரித்தபடியினால்தான் இத்தகைய துன்பங்கள் நேர்ந்தன!" என்று லார்டு வேவல் அந்தச் சமயம் இடித்துக் கூறியிருக்கலாம்.

ஆனால், அப்போதுகூட வேவல் எதுவும் சொல்லவில்லை. அவர் இறக்கும் வரையில் அதைப்பற்றி அவர் எதுவுமே கூறாதது அவருடைய உயர்ந்த சுபாவத்தையும் பெருந்தன்மையையும் காட்டுகிறது. அத்துடன் பிரிட்டிஷ் அரசியல் வாதிகள் ஜனநாயக சம்பிரதாயத்தை எவ்வளவு நன்றாக அறிந்து அனுஷ்டித்து வருகிறார்கள் என்பதையும் காட்டுகிறது.

டாக்டர் மத்தாய் விஷயத்தில் நாம் காண்பது என்ன?

ஸ்ரீ மத்தாய் தம்முடைய பதவியைப் புது நிதி மந்திரியிடம் ஒப்படைக்கும் தறுவாயில், தமக்கும் பிரதம மந்திரிக்கும் முக்கிய விஷயங்களில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டதாயும், தம்முடைய ராஜிநாமாவுக்கு அதுதான் காரணம் என்றும், இருந்தாலும் மேற்படி அபிப்பிராய பேதங்களைப் பகிரங்கப் படுத்தத் தாம் விரும்பவில்லை என்றும் சொல்லி வைத்தார்.

டாக்டர் மத்தாய் அவ்விதம் சொல்லாமல் சொல்லி விட்டதால் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவுக்குத் தம்முடைய நிலைமையைத் தெளிவு படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதற்குப் பிறகு டாக்டர் மத்தாய் மௌனமாக இராமல் மற்

# இறங்குவாரா?




பர்மா இந்தியர்களின் சொத்துக்களுக்கு உலை வைக்க முற்பட்டிருக்கும் பர்மா சர்க்காரின் மனம் இரங்கி அவர்கள் நியாயமாக நடந்து கொள்ளும்படி செய்வதற்காக சென்னை மந்திரிகளும் மற்றவர்களும் அடங்கிய ஒரு கோஷ்டி பர்மாவுக்குச் சென்றிருக்கிறது.

வுக்கு இரண்டு அணாவிலிருந்து மூன்றரை ரூபாய் வரையில் பல்வேறு விதமாக இருக்கிறது. எனவே, மூன்நூறு ரூபாய் விலையுள்ள ஒரு ஏக்கராவுக்குக் குறைந்த பட்சம் ஒன்றரை ரூபாய் ஈடுத்தொகை கிடைக்கும்! அதிகபட்சம் நாற்பத்திரண்டு ரூபாய் கிடைக்கும்! எப்படியிருக்கிறது நியாயம்? அதாவது சர்க்கார் அதிகபட்சமான தொகையை ஈடாகக் கொடுத்தால்கூட நிலத்தின் அசல் விலையில் பத்தில் ஒன்றுகூடக் கிடைப்பதற்கு வழியில்லை. ஈடுத் தொகை கிடைப்பதில் நிர்ணயமான முறை எதுவுமில்லை. மேற்படி தொகையை நிர்ணயிப்பது அதன் சம்பந்தமாக நியமிக்கப்பட்டுள்ள கமிஷனின் இஷ்டத்தைப் பொறுத்த விஷயம். கமிஷன் நிர்ணயிக்கும் தொகையும் உடனடியாக நிலச் சொந்தக்காரர்களுக்குக் கிடைக்கும் என்பதற்கும் வழியில்லை.

எனவே, நிலங்களை இழக்கும் பர்மா இந்தியர்களுக்கு நியாயமான ஈடுத் தொகை கிடைக்கவேண்டும். மேற்படி தொகையில் ஒரு பகுதி உடனடியாக அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். குறிப்பிட்ட காலத்துக்குள் பாக்கித் தொகை கிடைப்பதற்கும் உத்தரவாதம் அளிக்கப்படவேண்டும். சுதந்திர பர்மாவுக்கு உதவியளித்து அதனிடம் அனுதாபம் காட்டி வரும் இந்தியாவின் நல்லுறவில் பர்மியர்களுக்கு அக்கறை இருக்குமாயின், இந்த நிலப் பிரச்னையை நியாயமாகத் தீர்த்துவைக்க வேண்டும்.

*அட்டைப்பட விளக்கம்*

# விட்ட குறை வந்து தொட்டாச்சு!

"சிங்களம் புட்பகம் சாவகம் - ஆகிய
தீவு பலவினும் சென்றேறி — அங்கு
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும் நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு!"

—பாரதியார்.

இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் பாரத தேசத்துப் பண்பாடு கடல் கடந்து சென்று பல தேசத்து மக்களை வசீகரித்தது.

மேற்கே ரோமாபுரி வாசிகள் பாரத தேசத்து நுண்ணிய நூல் ஆடைகளின் கீர்த்தியை உணர்ந்து பொன்னும் மணியும் கொடுத்து மகிழ்ச்சியுடன் வாங்கிச் சென்றார்கள் என்று சரித்திரம் கூறுகிறது.

அவ்வாறே கிழக்கேயும் பாரததேசத்து நாகரிகம், வாணிகம் கடல்கடந்து சென்றது. முக்கியமாகத் தமிழ்ப் பண்பாடுதான் புட்பகம், சாவகம் என்றெல்லாம் தமிழ் நூல்கள் கூறும் போர்னியோ, ஜாவா, சுமத்ரா முதலிய இந்தோனேஷியத் தீவுகளுக்குச் சென்றது.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ் மன்னர்கள் கடல் கடந்து அந்நியநாடுகளுக்குச் சென்று செல்வாக்குடன் விளங்கினார்கள். அவர்களுடன் தமிழ் நாட்டுச் சிற்பிகளும் சங்கீத வித்வான்களும் சென்றார்கள்.

அவர்களுடன் ராமாயணமும் மகாபாரதமும் சென்றது. தமிழ்நாட்டுக் கோவில்கள் போன்ற பல கோவில்கள் அங்கே எழுந்தன.

இவ்விதம் பாரத தேசத்துடன் இந்தோனேஷியர்கள் சரித்திரம் தோன்றிய நாளிலிருந்தே தொடர்பு கொண்டிருந்தார்கள். ஆனால் இடைக்காலத்தில் இந்தோனேஷியாவுக்கும் பாரதத்துக்கும் அவ்வளவு தொடர்பில்லாதிருந்தது. அதற்குக் காரணம் பாரத தேசம் பிரிட்டனுக்கு அடிமையாகவும் இந்தோனேஷியா டச்சுக்கு அடிமையாகவுமிருந்ததுதான்.

ஆனால் இரண்டு நாடுகளும் சுதந்திரம் பெற்றவுடன், நீண்ட நாட்கள் பிரிந்திருந்த அந்நியோந்ய நண்பர்கள் ஒருவரை ஒருவர் முகமலர்ந்து தழுவிக் கொள்வதுபோல், மறுபடியும் பழைய நெருங்கிய நட்பு ஏற்பட்டு விட்டது.

நமது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய தலைவர் ஜவாஹர்லாலுக்கு இன்று இந்தோனேஷிய மக்கள் அமோக அன்பும் மதிப்பும் அளித்து வரவேற்கின்றனர் என்று படிக்கும்போது உள்ளத்தில் அளவு கடந்த மகிழ்ச்சி பொங்குகிறது.

இந்த மகிழ்ச்சியில் நம் பண்டைய சரித்திரத்தை நினைக்கத் தோன்றுகிறது. நம் மூதாதையர்கள் எவ்வளவு உற்சாகமாக அந்த நாட்களில் அழகிய படகுகளில் கடல் கடந்து புட்பகம், சாவகம் ஆகிய தீவுகளை அடைந்திருப்பார்கள் என்று நம் மனசு கற்பனை செய்து மகிழ்கிறது. அந்தக் கற்பனைக் காட்சியை நமது சித்திரக்காரர் இந்த இதழ் அட்டைப்படமாக வரைந்திருக்கிறார்.

மலர் 9

# கல்கி

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 45

## என்ன சேதி?

### தீ தணிந்தது

பர்மா சுதந்திரம் பெற்ற உடனே இந்தியர்களுடைய தலையில் கை வைத்தால்தான் தங்களுடைய சுதந்திரம் நிலைக்கும் என்று பர்மா சர்க்கார் கருதினர் போலும்! அங்குள்ள இந்தியர்களின் நில புலன்களையெல்லாம் நியாயமான நஷ்டஈடுத் தொகை கொடுக்காமல் அபகரித்துக் கொள்வதற்காக ஒரு சட்டத்தை நிறைவேற்றினார்கள். அந்தச் சட்டத்தை வெகு துரிதமாக அமுலுக்குக் கொண்டு வரவும் பர்மா சர்க்கார் ஆயத்தமானார்கள். அதைக் கண்டு திகில் அடைந்து பர்மா இந்தியர்கள் கூக்குரலிட்டனர். எனவே, பர்மா இந்தியர்களுக்கு நீதி வழங்கும்படி பர்மா சர்க்காரைக் கேட்டுக் கொள்வதற்காக இந்திய சர்க்கார் ஒன்றரை வருஷத்துக்கு முன் ஒரு தூது கோஷ்டியை நியமித்தார்கள். அந்தக் கோஷ்டியினர் புறப்பட்டுச் செல்லும் தேதியும் சென்ற வருஷம் ஜனவரி மாதம் நிர்ணயமாயிற்று.

அந்த நிலையில் பர்மாவைக் கலகத் தீ சூழ்ந்து கொண்டது. கலகக்காரர்கள் மள மளவென்று பல நகரங்களையும் கைப்பற்றிக் கொண்டனர். ரங்கூனையும் அந்த நகரைச் சுற்றிலும் உள்ள இடங்களையும் தவிர மற்றப் பிரதேசங்கள் எல்லாம் கலகக்காரர்களின் வசமாயின. பர்மா சர்க்கார் திகைத்துத் திக்குமுக்காடினர். இறுதியில் பிற நாடுகளின் உதவியால் தாங்கள் இழந்த நகரங்களை மறுபடியும் கைப்பற்றுவது பர்மா சர்க்காருக்குச் சாத்தியமாயிற்று. சென்ற வாரம் கல்கத்தாவுக்கு விஜயம் செய்த பர்மா பிரதமர் ஸ்ரீ தாகின் நூ இன்னும் இரண்டொரு மாதங்களில் பர்மாவிலே கலகத் தீ முற்றிலும் தணிந்து பூரண அமைதி நிலவும் என்று கூறியுள்ளார்.

### வெற்றி கிடைக்கட்டும்

கலகத் தீ தணிந்துவிட்டாலும் இந்தியர்களுக்கு விரோதமாக பர்மா சர்க்கார் நிறைவேற்றியுள்ள சட்டத்தின் உக்ரம் தணியுமா என்பதே இப்போது கேள்வி. அந்தச் சட்டத்தின் பயங்கர உருவத்தை மாற்றுவதற்காக இந்திய சர்க்கார் சில தினங்களுக்கு முன் நியமித்த தூது கோஷ்டியினர் இப்போது பர்மாவுக்குச் சென்றிருக்கிறார்கள். அந்தச் சட்டத்தினால் தமிழர்களே பெரிதும் பாதிக்கப்பட்டிருப்பதால் அந்தக் கோஷ்டியில் சென்னை மந்திரிகளில் இருவரான கனம் பக்தவத்சலமும் கனம் கோபால ரெட்டியும் இடம் பெற்றிருக்கிறார்கள். அவர்களுடைய முயற்சி வெற்றி பெறும் என்றும், பர்மாவில் இந்தியர்களின் சொத்துக்களுக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்து தாமதமின்றி நிவர்த்தியாகும் என்றும் எதிர்பார்க்கிறோம்.

பர்மாவில் ஒன்றேகால் கோடிக்கு மேற்பட்ட ஏக்கர் நிலங்கள் இருக்கின்றன. அவற்றில் ஐந்தில் ஒரு மடங்கு இந்தியர்களுக்குச் சொந்தமானவை. அந்த நாட்டில் இந்தியர்கள் குடியேறிய பிறகுதான் அங்கு விவசாயம் அபிவிருத்தியடைந்து நெல் கொழித்து நாடு செழித்தது என்பதைப் பர்மா சர்க்கார் அதிகாரிகளும் மற்றவர்களும் எத்தனையோ தடவை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க இந்தியர்களின் நிலங்களை நியாயமான நஷ்டஈடுத்தொகை கொடுக்காமல் கைப்பற்ற முற்படுவது நேர்மையாகுமா?

இந்தியர்கள் எவ்வளவு நிலவரி கொடுக்கிறார்களோ அதைப்போல் பன்னிரண்டு மடங்குக்குமேல் நஷ்டஈடுத்தொகை இருக்கக் கூடாது என்று பர்மா சர்க்கார் நிர்ணயித்திருக்கிறார்கள். நிலவரி ஒரு ஏக்கரா




# கல்கி

பொருளடக்கம்

மலர் 9 | இதழ் 45 — ஜூன் 11 — விக்ருதி ௵ வைகாசி 29

# பொது மக்களின் சோப்பு

பரிபக்குவமடைந்து முப்பது வருஷங்களுக்கு அதிகமான கோத்ரெஜின் ஆராய்ச்சியும்—முதன் முதலாக தாவர எண்ணெய் சோப்புக்களில் நுண்ணிய ஆராய்ச்சியாளரும் தயாரிப்பவர்களுடையதுமான — இந்த பிரசித்தி பெற்ற சானி மார்க் டாய்லெட் (ஸ்நான) சோப், இனிமையான மணமூட்டப்பட்டு. எளியவர்களின் பண நிலைமைக்கும் ஏற்றவாறு சாமானிய மனிதனுக்கும் தன்னையும் தன் குடும்பத்தையும் சுத்தமாயும் ஆரோக்யமாயும் வைத்துக்கொள்வதை ஓர் இன்பமயமாக்குகிறது.

நூற்றுக்கு நூறு பங்கு பரிசுத்தமானது. எடையை அதிகரிக்கச் செய்யும். எவ்விதமான கலப்படமும் இல்லாதது.

உங்களில் ஒவ்வொருவரும் இன்றே ஒரு பெட்டியை வாங்கி சீக்கிரமே திருப்தியைக் காணுங்கள்.

## தனவந்தருக்கும் இன்பமளிப்பது



**ரூ. 3-4 + வரி**

1 டஜன் புதிய வாசனை பொருந்திய பலநிறமுள்ள கலர் வில்லைகளுக்கு

Godrej ரிஜிஸ்டர்டு

Turkish Bath

## கோத்ரெஜ் டர்க்கிஷ் பாத்

100 சதம் தூய்மைக்கும் மிருகக் கொழுப்பற்றதென்பதற்கும் உத்திரவாதமானது

கோத்ரெஜ் சோப்ஸ், லிமிடெட்.
மதராஸ்: 164, பிராட்வே,
கொச்சின்: 6/36, கல்வத்தி.



# ஒவ்வொரு வேளை உணவுடனும் ஆரோக்யம் தரும் பானம்

குடும்பத்தின் ஒவ்வொரு நபரும் விரும்பக்கூடிய நறுமணம் உள்ளது "ஓவல்டின்". விஷயமறிந்த தாய்மார்கள், காலையிலும் இரவிலுமட்டுமின்றி ஒவ்வொரு வேளை உணவின் போதும் இந்த உணவு பானத்தைக் கொடுப்பதன் பயனை நன்குணர்வர்.

'ஓவல்டின்' மதிப்புவாய்ந்த அதிகப்படி உணவாக இருந்து விசேஷ வலுவும் ஜீவ சக்தியுமளிக்கும். சாதாரண உணவில் இது எப்பொழுதும் கிடைக்காது. குழந்தைகள் போஷாக்குடன் வளரவும், இரவில் நன்றாகத் தூங்கவும் உதவுகின்றது.

'ஓவல்டினில்' பழுத்த பார்லி மால்டின் புஷ்டியும், ஜீவ சக்தியும் அளிக்கும் குணங்களும், சத்துமான கட்டிப்பாலும், விசேஷமாகத் தயாரித்த கோக்கோவும், மதிப்பு வாய்ந்த இயற்கை பாஸ்படேட்களும், விடமின்களும் நிறைந்த அளவில் அடங்கியுள்ளன.

இளையோர், நடுத்தர வயதினர், முதியோர் யாவருக்கும் வேண்டியது இது ஒன்றுதான்.

# 'OVALTINE'

## ஓ வ ல் டி ன்




**உலகில் மிகப் பிரசித்தி பெற்ற உணவு பானம்**

**விநியோகஸ்தர்கள்: க்ரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.**

ஓ. 303.



Toilet Soap

ஜுவல் பதித்த கைக் கடிகாரங்கள்




| | | | |
|---|---|---|---|
| 605 | ப்ளைன் | 25/- | 12/- |
| 605 | கபீயர் | 34/- | 15/8 |



| | | | |
|---|---|---|---|
| 606 | 15 ஜுவல் க்ரோம் | 78/- | 38/- |
| 606 | 15 „ ரோல்டு கோல்டு | 88/- | 43/- |



| | | | |
|---|---|---|---|
| 607 | 5 ஜுவல் க்ரோம் | 60/- | 29/8 |
| 607 | 5 „ ரோல்டு கோல்டு | 70/- | 34/8 |



| | | | |
|---|---|---|---|
| 608 | க்ரோம் கேஸ் | 25/- | 13/- |
| 608 | உயர் ரகம் | 32/- | 15/- |

○●○

தபால் செலவு தனி. இரண்டாக ஆர்டர் செய்வோருக்கு இலவசம்

**PIONEER WATCH Co**
POST BOX NO 11428 CALCUTTA




# 'ஜீவான்ஜன்'

சரீரத்தின் மேல் தடவி
தேய்ப்பதற்கும் ஆவியாக
சுவாசிப்பதற்கும்
உபயோகரமானது
ரஸாயனக் களிம்பு மிருக
கொழுப்பு சேராதது

தயாரிப்பவர்கள்
ஜீவான்ஜன் லாபோரட்டரீஸ் லிட்
மதராஸ்-14




ஸோல் ஏஜன்டுகள்
கே.கே.பிள்ளை & கோ
ராயப்பேட்டை, மதராஸ்-14

# ஜீவான்ஜன்

